# மொழிவழி ஆட்சியின் முதல் வெற்றி

## பி. ராமமூர்த்தி விளக்கம்

Phone : 85777
தந்தி:—"ஜனசக்தி"

விலை 3 அணு

இலங்கையில் 25 சதம்
(விமானப் பதிப்பு)

# ஜனசக்தி

(கம்யூனிஸ்ட் கட்சி வார இதழ்)

மலர் 12] ஞாயிறு 23—10—1955 [இதழ் 5

**ராஜ்யப் புனரமைப்புக் கமிஷன் சிபார்சுகள் பற்றி சென்னை சட்டக்கல்லூரி பிரதிநிதி சபையில் தோழர் பி. ராமமூர்த்தி 17-10-55ல் பேசினர். மொழிவழி ராஜ்யம் கோரி நீண்டநெடுங்காலமாகப் போராடிவந்த மக்களின் மகத்தான முதல் வெற்றியே ராஜ்யப் புனரமைப்புக் கமிஷன் அறிக்கையின் தீர்ப்பு. மொழிவழி ராஜ்ய அமைப்பு தேசத்தை சீர்குலைக்கும் என்று கூக்குரலிட்டவர்களுக்கு இந்த அறிக்கை ஒரு பெரும் அடியாக உள்ளது என்றார்.**

மொழிவழி ராஜ்யம் தவருன கோரிக்கை என்று நொண்டிக்காரணங்கள் கண்டு பிடிக்க கமிஷன் பகிரதப்பிரயத்தனப்பட்டபோதிலும் அது சிபார்சு செய்துள்ள 16 ராஜ்யங்களில் 14 அதாவது சென்னை ஆந்திரா, கேரளம், கன்னடம், ஹைதராபாத், விதர்ப்பம், பிஹார், ஒரிசா, மேற்குவங்கம், அஸ்ஸாம், மத்திய பிரதேசம், உத்தரபிரதேசம், ராஜஸ்தான், காஷ்மீர் ஆகிய ராஜ்யங்கள் மொழியின் அடிப்படையிலே அமைந்துவிட்டன. பம்பாய், பஞ்சாப் ஆகிய இரு ராஜ்யங்களைப் பொறுத்தவரையில் பெருமுதலாளிக் கும்பல்களின் கூக்குரல் மேலோங்கியுள்ளது. பஞ்சாபிய ராஜ்யம், குஜாராத், மகாராஷ்டிரம் கோரும் மக்களது கோரிக்கைகளை கமிஷன் அங்கீகரிக்காவிட்டாலும் அக் கோரிக்கைகளை இன்று நடக்கும் இயக்கம் சீக்கிரமே அங்கீகரிக்கச் செய்யுமென்பதில் பரிபூரண நம்பிக்கை உண்டு என்றார் தோழர் ராமமூர்த்தி.

மொழியின் அடிப்படையில் தமிழ் நாட்டைப் பிரித்துவிட்டு அதற்குச் சென்னை என்று பெயர் வைத்தது அர்த்தமற்றது பொருத்தமற்றது என்றார் ராமமூர்த்தி. இந்தப் பெயரை மாற்றுவதுடன், தேவிகுளம், பீர்மேடு, கூடலூர் தாலுக்காக்கள் சம்பந்த பட்டவரை சகோதரபாவத்துடன் சுமுகமாகத் தீர்த்துக்கொள்வதிலும் தமிழ் கேரள மக்கள் வெற்றி காண்பர் என்றார். மொழிவழி ராஜ்யம் கோரிய மக்கள் இன்று அடைந்துள்ள வெற்றியை மனதில் கொண்டு, மற்ற பிரச்சினைகளை அணுகவேண்டும் என்று எடுத்துக் காட்டினர்.

### கிளர்ச்சியின் சரித்திரம்

மொழிவழி ராஜ்யக் கிளர்ச்சியின் சரித்திரம் பற்றி தோழர் ராமமூர்த்தி பேசுகையில் ஏகாதிபத்தியத்தை எதிர்த்த விடுதலைப் போராட்டத்தில் சாதாரண மக்களைத் திரட்டவேண்டிய அவசிய மேற்பட்டது. இதற்கு ஆங்கில பாஷையை உபயோகிப்பதின் மூலம் செய்ய முடியாது. மக்களுக்குப் புரியும் பாஷையிலேயே கிளர்ச்சி செய்யவேண்டியிருந்தது. அதனல்தான் மொழியின் அடிப்படையில் பிரதேசக் காங்கிரஸ் கமிட்டிகள் அமைந்தன. மொழியின் அடிப்படையில்தான் எதிர்கால இந்திய மாகாணங்கள் அமையுமென்று மோதிலால் நேரு தலைமையில் நியமிக்கப்பட்ட காங்கிரஸ் கமிட்டியும் சிபார்சு செய்தது. அந்தக் கமிட்டிக்குப் பண்டித ஜவஹர்லால் நேரு காரியதரிசியாக இருந்தார். இதே கொள்கையை 1937 தேர்தலின்போதும், 1947 தேர்தலின்போதும் காங்கிரஸ் ஊர்ஜிதம் செய்தது.

ஆனல் அரசாங்க அதிகாரம் காங்கிரஸின் கையில் வந்தபிறகு நேருவின் தலைமையிலுள்ள காங்கிரஸ் நிராகரித்தது. பொட்டி ஸ்ரீராமுலுவும், சர்வகட்சிகளையும் சேர்ந்த பல ஆந்திரத் தியாகிகள் தங்கள் இன்னுயிரைக் கொடுத்து இன்றைய காங்கிரஸ் கொள்கையை மாற்றவேண்டிய நிலைமை ஏற்பட்டது என்றார் ராமமூர்த்தி.

### ஒற்றுமை உணர்ச்சி

சென்ற காலத்தில் நமது இந்திய தேசம் ஒன்றுபட்ட ஒரே தேசமாக இருந்ததில்லை. அசோகர் விக்ரமாதித்தியர், மொஹலாயர்கள், ஆண்ட காலங்களிலாகிலும் சரி, சமீபத்தில் ஆங்கிலேயர் ஆண்ட காலத்திலும் சரி இந்தியா ஒன்றுபட்ட ஒரே ஆட்சியின்கீழ் இருந்ததில்லை.

அதனல் இந்தியாவில் ஒற்றுமை உணர்ச்சி ஒற்றுமை ஆர்வம், ஒற்றுமையின் அவசியம் ஏற்படவில்லையா? ஏற்பட்டது. எப்பொழுது? ஆங்கிலேய ஆட்சி காலத்தில் அன்னிய ஆதிக்கத்தை எதிர்த்து இந்தியாவிலுள்ள பல்வேறு தேசிய இனமக்கள் போராடும்பொழுது தங்களது வாழ்க்கையின் முன்னேற்றம் அல்லது வீழ்ச்சி ஒரே தன்மையானது, அது ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டம் வெல்வதைப் பொறுத்திருக்கிறதுஎன்ற ஒற்றுமை உணர்வு ஏற்பட்டது அதுதான் இந்தியா ஒன்று, அது ஒரு கூட்டுக் குடும்பம் என்ற உணர்வு ஏற்பட்டது. திராவிட கழகம் போன்றோர் இவ்வித ஒற்றுமையை மறுக்க எவ்வளவு முயன்றாலும் அவர்கள் வெற்றியடைய முடியாது. ஏனெனில் போர்க்களத்தில் மனித வாழ்வுக்காக ஏகாதிபத்தியத்தையும் சகல பிற்போக்கு சக்திகளையும் எதிர்த்துப் போராடி உருவான ஒற்றுமை அது என்றார் ராமமூர்த்தி.

மொழியின் அடிப்படையில் ஏற்பட்ட இவ்வித ஒற்றுமையையும் விழிப்பையும் காங்கிரஸ்காரர்கள் ஏற்க மறுப்பதனல்தான், இன்று ஒற்றுமையைச் சீர்குலைக்கும்சக்திகள் வளருகின்றன. காங்கிரசிற்குள்ளேயே அடிதடி.

### காங்கிரஸில் சண்டை ஏன்?

மாகாணப் புனரமைப்பு என்ற இந்தப் பிரச்னையில், பண்டித நேரு ஏன் தனது கட்சியை ஒன்றுபடுத்த முடியவில்லை என்று கேட்கிறோம். குஜரத் காங்கிரஸ்காரர்களும் மகாராஷ்டிரக் காங்கிரஸ்காரர்களும் ஏன் குஸ்திபோடுகிறார்கள். பீகார் காங்கிரசும் வங்காளக் காங்கிரசும் ஏன் சண்டை போடுகிறார்கள். உ. பி. காங்கிரசிற்குள், ஒரிசாக் காங்கிரசிற்குள் கன்னடக் காங்கிரசிற்குள் ஏன் சண்டை! குஸ்தி! முன்பு இந்தப் பிரச்சனையில் காங்கிரஸ் தலைமையின் போக்கிற்கு எதிராக உண்ணுவிரதமிருந்து இறந்தவர் ஒரு காங்கிரஸ்காரர். இன்று உண்ணுவிரதமிருக்கப் போவதாக கூறுபவர்கள் கன்னடத்திலும் மகாராஷ்டிரத்திலும் உள்ள காங்கிரஸ்காரர்கள்.

பண்டித நேரு தன் கட்சியை ஏன் ஒன்றுபடுத்த முடியவில்லை. காங்கிரசில் மட்டுமல்ல, கம்யூனிஸ்டு கட்சியைத் தவிர மற்ற ஒவ்வொரு கட்சியிலும் ஏன் இந்தப் பிரச்சனையில் நெருக்கடி ஏற்பட்டுள்ளது. காரணமென்ன?

மொழியின் அடிப்படையில் தேசிய இனங்கள் வளர்ந்திருப்பதை, அந்த தேசிய இனங்கள் மொழிவழி ராஜ்யம் கோருவதையும், அந்த ராஜ்யங்களுக்கு சம அந்தஸ்து, சம சந்தர்ப்பங்கள் கொடுக்கப்படவேண்டிய அவசியத்தையும் காங்கிரஸ் தலைமையும் மற்ற ஒவ்வொரு கட்சியும் ஏற்க மறுப்பதால் ஏற்பட்ட விளைவுகள் இவை என்றார் ராமமூர்த்தி.

கம்யூனிஸ்டு கட்சி ஒன்றுதான் சரித்திர பூர்வமான இந்த விஞ்ஞான உண்மைக்காகப் போராடுவதால் அந்தக்கட்சியில் இவ்விதப் பூசல் ஏற்படுவதில்லை. சகல பகுதி மக்களையும் தன் கொள்கையை நியாயமென ஒப்புக்கொள்ளச்செய்ய முடிகிறது என்றார்.

# கம்யூனிஸ்டுகளைத் தேர்ந்தெடுங்கள்

## மதுரையில் தேர்தல் அறிக்கை

மதுரை, கோவை, சேலம், தூத்துக்குடி, திருப்பூர், திண்டுக்கல் மற்றும் சில நகரசபைகளுக்கு, வருகிற 27ம் தேதி தேர்தல் நடக்கப்போகிறது. மக்களின் நல்வாழ்வுக்காகத் தன்னையே பரிபூரணமாக அர்ப்பணித்துள்ள கம்யூனிஸ்ட் கட்சியின் தலைசிறந்த புதல்வர்கள் போட்டி போடுகிறார்கள்.

கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்ற முறையில் யதேச்சாதிகாரம் நடத்தும் சர்வாதிகாரிகளை வீழ்த்திவிட்டு, ஜனநாயக நகரசபை அமைய, நகரம் வளம் பெற, மக்கள் நலம்பெற கம்யூனிஸ்டு அபேட்சகர்களையும், கம்யூனிஸ்ட் கட்சியின் ஆதரவு பெற்ற ஜனநாயகவாதிகளையும் பெருவாரியாகத் தேர்ந்தெடுக்குமாறு வாக்காளர் பொதுமக்களைப் பணிவன்புடன் கேட்டுக்கொள்ளுகிறோம்.

சென்னைக்கு அடுத்தபடி பெரிய நகரம் மதுரை. சீக்கிரம் கார்ப்பரேஷனுகப் போகிற நகரமிது. இதன் ஜனத்தொகை 4 லட்சம். வருட வருமானம் 1 கோடி ரூபாய்.

நகரசபைகளுக்குப் பூரண அதிகாரம் கொடுக்காமலும், நகரசபை தீர்மானங்களை ரத்து செய்யவும், அமுலாகாதபடி தாமதப்படுத்தவும் இன்று 1920-ம் வருட வெள்ளையர் ஆட்சி சட்டப்படி, கலெக்டர்களுக்கும், கமிஷனர்களுக்கும், மற்றும் பல அதிகாரிகளுக்கும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த முறையைப் போக்குவதற்காக கமிஷனர் பதவி ஒழிக்கப்பட வேண்டுமென்றும், தேர்ந்தெடுக்கப்பட்ட சேர்மனுக்கே நிர்வாக அதிகாரங்கள் தரப்பட வேண்டுமென்றும் கம்யூனிஸ்ட் கட்சி பாடுபடும்.

### கல்வி

கல்வி பயிலவேண்டிய குழந்தைகள் 42811 இருந்தும்கூட, 21,173 பேருக்குத்தான் மதுரை நகரசபை பள்ளிகளில் இடமிருக்கும்போது சரி பாதிப் பேருக்கு கல்வி வசதி இல்லாதது வெட்கக் கேடாகும். இந்த நிலைமையை மாற்றியமைக்க மேலும் பல பள்ளிகள் திறக்கப்பட வேண்டும்.

நடுத்தரப் பள்ளிகளையும் உயர் நிலைப் பள்ளிகளையும் இன்னும் அதிகமாக நகரசபை நடத்தவேண்டும். ஒரு கல்லூரியையும், எஞ்சினீரிங் கல்லூரியையும் நகர சபையே நடத்த முன்வரவேண்டும். ஆசிரியர்களின் கோரிக்கைகளை வழங்கவேண்டும்.

### வைத்தியம்

சென்ற வருடம் 2551 பிரசவங்களைக் கவனிக்க போதுமான பிரசவ விடுதிகள் இல்லை. இந்தக் குறையை நிவர்த்திக்க ஆண்டுதோறும் ஒரு பிரசவ விடுதி கட்ட வேண்டும்.

3 வருடங்களுக்கு 5 ஆஸ்பத்திரிகள் கட்டவேண்டும். சர்க்கார் உதவி பெற்று, ஒரு க்ஷயரோக ஆஸ்பத்திரிகட்ட வேண்டும். யானைமலை குஷ்டரோக விடுதியைப் பெரிதாக்கவேண்டும்.

நகர சுகாதாரம் திறம்பட நடக்க மேற்கொண்டு 500 நகர சுத்தி தொழிலாளர்களை அமர்த்த வேண்டும். அவர்களது குறைகளைப் போக்க வேண்டும். அனுப்பானடி, பனையூர் கால்வாய்களுக்கு மேல் மூடி போடுவதுடன், செல்லூர் சாக்கடைத் தண்ணீர் வைகையில் கலக்காதபடி செய்ய வேண்டும்.

### தண்ணீர்

தண்ணீர் வசதியை அபிவிருத்தி செய்ய மேலக்கால் தண்ணீர்த் திட்டத்தை உடனே ஆரம்பிக்க வேண்டும். அதுவரை தேவையான இடங்களுக்கு லாரிகள் மூலம் தண்ணீர் சப்ளை செய்ய வேண்டும்.

### மின்சாரம்

வீடுகளில் உபயோகிக்கப்படும் மின்சாரத்திற்கு யூனிட்டுக்கு $3\frac{1}{2}$ அணு இருப்பதை, 2 அணுவுக்குக் குறைக்கவேண்டும், 20 வருடங்களுக்கு மேற்பட்ட மீட்டர்களுக்கு சர்சார்ஜ் வசூலிக்கக் கூடாது.

### வீட்டுவசதி

வீடு கட்டுவதற்கு சர்க்கார் ஒதுக்கியுள்ள நிதியைப் பயன்படுத்தி, வீடு கட்டும் கூட்டுறவு சொஸைடி ஆரம்பித்து, வீடுகள் கட்ட வேண்டும். வீட்டுக் கிரயத்தை, குடியிருப்பவர்களிடம் 15 வருட தவணையில் வாங்கவேண்டும். திடீர்நகர், பிரசன்ன சதுக்கம், பூந்தோட்டம் போன்ற இடங்களை அங்கு வசிக்கும் மக்களுக்கும், 99 வருட குத்தகை என்ற பேரால் சர்க்கார் நிலத்தில் வீடு கட்டி குடியிருக்கும் 5000 குடும்பங்களுக்கும் இந்த இடங்களை இலவசமாக ஜாரி செய்ய வேண் வேண்டும்.

### பொது வசதிகள்

நகரின் மத்தியில் மாபெரும் பொது மண்டம் அமைக்க வேண்டும். அதுவரை முனிசிபல் பள்ளிக்கூடங்களை விடுமுறை நாட்களிலும் ஒய்வு நேரங்களிலும் பொதுஜன ஸ்தாபனங்களுக்கு எவ்வித பாரபட்சமுமின்றி குறைந்த வாடகையில் விடவேண்டும்.

வார்டுக்கு ஒரு இலவச வாசகசாலையும் அதில் சகல கட்சிப் பத்திரிகைகளும் நூல்களும் வர

(2-ம் பக்கம் பார்க்க)

# வடசென்னையில் அட்டூழியம்

வடசென்னையில் மீனம்பாள் நகரில் கம்யூனிஸ்டு அபேட்சகர் தோழர் கருப்பண்ணனை ஆதரித்த ஊழியர்களும் பல வாக்காளரும் படுகாயமுறத் தாக்கப்பட்டுள்ளனர். நீசத்தனமாக, பல பெண்களும் தாக்கப்பட்டுள்ளனர்.

அந்தத் தொகுதியில் வெற்றியடைந்த ஒரு சுயேச்சை அபேட்சகரை ஆதரித்த நபர்கள் இந்தத் தாக்குதலில் ஈடுபட்டதாகச் சொல்லப்படுகிறது. 'கருப்பண்ணனை ஏன் ஆதரித்தீர்கள், ஏன் அவருக்கு வாக்களித்தீர்கள்' என்று கூச்சலிட்டுக்கொண்டு தாக்கியதாகச் சொல்லப்படுகிறது.

இச்செய்தி உண்மையானல், இந்த நாட்டில் தேர்தல் நடப்பது எதற்காக? தனக்கு இஷ்டப்பட்ட ஒருவருக்கு வாக்களிக்கும் உரிமை ஒவ்வொரு வாக்காளருக்கும் உண்டு என்ற உரிமை வெறும் கேலிக்கூத்தா? என்ற கேள்விகள் எழுகின்றன. இதற்குப் பதிளிக்கவேண்டியவர்கள் இனி இன்றைய ஆட்சியாளர்தான்.



பலத்த அடிபட்டவர்கள்: முனியம்மாள், அன்னம்மாள், முருகேசன் (கருப்பண்ணனுக்கு கார் ஓட்டியவர்), புல்லையாவுக்கு வலதுகால் எலும்பு முறிந்து ஆஸ்பத்திரியில் இருக்கிறர், குட்டி, ஏழுமலை, நடராஜன் ஆகியோருக்கும் பலத்த காயம்.

தலையங்கம்

# ஏ. ஐ. டி. யு. சி. 35-வது ஆண்டு விழா

அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸின் மகிமை பொருந்திய 35-வது ஆண்டு விழா, அக்டோபர் 31-ம் தேதி வருகிறது. இவ் விழாவை தமிழ்நாட்டுத் தொழிலாளி வர்க்கம் மகத்தான முறையில் சிறப்புறக் கொண்டாடுவார்களென்பதில் ஐயமில்லை.

இன்று தமிழகத் தொழிலாளர்கள்மீது ரேஷனலேசேஷன் பூதம் ஏவி விடப்பட்டிருக்கிறது. ஈவிரக்கமற்ற முறையில் ஆள் குறைப்பும், மூச்சுத் திணறி மயங்கிவிழும் வரையிலும் வேலைப் பளுவும் சுமத்தப்படுகிறது. விருதுநகர் டெக்ஸ்டைல் மில்லில் 6 தறி பார்த்தவர்களை 12 தறி பார்க்கும்படி நிர்ப்பந்திக்கிறார்கள். பழனி மில்லில் ஒரு பகுதி தொழிலாளர்களுக்கு லீவு கொடுத்துவிட்டு, அந்த வேலையை மீதமுள்ளவர்களைக் கொண்டே செய்விக்கிறார்கள். ஹார்வி மில்களில் வேலைப்பளு முயற்சி தீவிரமாகி வருகிறது. பி. அண்டு சி. மில்லில் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுக்கக்கூடிய அளவுக்கு வேலைப்பளு அதிகரித்துவிட்டது. தென் இந்திய மில் முதலாளிகள் சங்கத்தைச் சேர்ந்த மில்களில் ஏற்கெனவே வேலைப்பளு, தாங்க முடியாத அளவுக்கு சுமத்தப்பட்டுவிட்டது.

ஆனால் வேலைப்பளுவுக்கு ஏற்றபடி சம்பள உயர்வு கிடைக்கவில்லை. இந்த நிலையில் போனஸ் மறுப்பும், பஞ்சப்படி வெட்டும், கதவடைப்புகளும் சாதாரணமாகி வருகிறது. எல்லாத் தொழில்களிலும் ஏறக்குறைய இதே நிலைமைதான்!

வேலைப் பளுவைச் சுமத்துவதின்மூலமாக, முதலாளிகள் யுத்தகாலத்தைப் போன்று மூலதனத்தைவிட பல மடங்கு லாபம் சம்பாதித்துள்ளார்கள்.

இந்தச் சூறையாட்டத்தை எதிர்க்கும் ஜனநாயகத் தொழிற் சங்க ஊழியர்கள்மீது குண்டர்களை ஏவித் தாக்குகிறார்கள். கதவடைப்பு நடத்தி பட்டினி போடுகிறார்கள். ஊழியர்கள்மீது போலீஸ் வழக்கு தொடுக்கிறார்கள்.

தாக்குதல்களாலும் அடக்குமுறையாலும் தொழிற் சங்க இயக்கத்தை நசுக்க முடியாமற் போகவே, முதலாளிகளுக்கு ஆதரவாக ஜனநாயகத் தொழிற் சங்கங்களைச் சட்டவிரோதமாக்கி முதலாளிகளுக்குத் தலையாட்டும் ஐ.என்.டி.யு.சி. தலைமையை நிலைநாட்ட சர்க்கார் முன்வருகிறது. பம்பாய் கருப்புச் சட்டத்தை அகில இந்தியாவுக்கும் விஸ்தரிக்க சர்க்கார் ஆலோசித்து வருகிறது. மிகப் பெரிய அபாயம் தொழிற் சங்க இயக்கத்தின் முன்னே நிற்கிறது. இந்த அபாயத்தை அ. இ. தொ. ச. காங்கிரஸின் ஜெனரல் கவுன்ஸில் கூட்டம் சுட்டிக் காண்பித்திருக்கிறது.

தொழிலாளர்கள் மத்தியில் சகல அரசியல் கருத்துகொண்டவர்களும் இருக்கிறார்கள், இருந்[illegible] வர்க்கம் என்ற முறையில் [illegible]துலுமகூட, தொழிலாளிகும் இச்சட்டத்தை [illegible] அனைவரையும் ஆபத்திற்குள்ளாக்கிடிக்க வேல[illegible] எதிர்த்து, வர்க்க ஒற்றுமையைச் சிருஷ்[illegible]ண்டியது உடனடி அவசிய அவசரம்.

ஏ.ஐ.டி.யு.சி. யின் 35-வது ஆண்டு விழா தினத்தை வேலைப்பளு எதிர்ப்பு தினமாகவும், தொழிற் சங்க அங்கீகார தினமாகவும் தமிழ்நாட்டுத் தொழிலாளர்கள் கொண்டாடுவார்கள். சகல தொழிலாளர்களின் சகோதர ஒற்றுமை விழாவாகவும், போராட்ட சபதமேற்கும் தினமாகவும் இவ்விழா விளங்குமென்று நம்புகிறோம்.

## தேர்தல் தினத்தில் விடுமுறை

சென்னை ராஜ்யத்தில் பல நகரங்களிலும் நகரசபைத் தேர்தல்கள் நடைபெற்றன. இன்னும் மதுரை, கோவை முதலிய நகரங்களில் தேர்தல்கள் நடக்கவிருக்கின்றன. சர்வஜன வாக்குரிமையின் பிரகாரம் நடைபெறும் தேர்தல், மக்கள் தங்களது அபிப்பிராயத்தை பகிரங்கமாக எடுத்துக்கூறும் வாய்ப்பு, ஜனநாயகத்தின் மாபெருஞ் சாதனை என்றெல்லாம் கொட்டு மேளத்துடன் கோஷிக்கப்படுகிறது.

ஆனால் நடைமுறை என்ன? வாக்காளர் பதிவு தொட்டுத் தேர்தலில் ஓட்டளிப்பது வரையில் இந்த வாக்குரிமையைப் பயன்படுத்த முடியாது தவிர்க்க எண்ணற்ற முட்டுக்கட்டைகள் போடப்படுகின்றன. எத்தனையோ பெயர்கள் வாக்காளர் ஜாபிதாவில் காணப்படவில்லை.

இது ஒருபுறமிருக்க தேர்தல் நடைபெறும் தினத்தில் விடுமுறை இல்லை. வேலைக்குச் செல்பவர்கள் வாக்களிக்க வசதியில்லை. சென்னை போன்ற தலைநகரத்திலேயே முப்பது சத விகிதம் வாக்காளர்கள்தான் வோட்டளித்தார்கள் என்றால் இதைவிட அப்பட்டமான அத்தாட்சி வேண்டுமா? மக்களிடத்திலே வோட்டுப்போட ஆர்வமில்லை அக்கரையில்லை என்று கூறுவது வெறும் நொண்டிச்சாக்கே.

ஒரு ஜனநாயக உரிமையை மக்களுக்கு அளிப்பதோடு கடமை தீர்ந்துவிடவில்லை. அந்த உரிமையைத் தட்டுத் தடங்கல்களின்றிப் பரிபூர்ணமாக அனுபவித்து செயல்படத்தக்க வாய்ப்பும் சூழ்நிலையும் அளிக்கவேண்டும் இதுவே சம்பூர்ண ஜனநாயகம். நாகரீகமுள்ள நாடுகளில் எல்லாம் தேர்தல் தினத்தன்று பொது விடுமுறை விடப்பட்டு எல்லோரும் வாக்களிக்க சந்தர்ப்பம் கொடுக்கப்படுகிறது. இது நியாயமான கோரிக்கை. மதுரை, கோவை தேர்தல்களிலாவது முந்திய தவறுக்குப் பரிஹாரம் என்ற முறையில் தேர்தல் தினத்தன்று விடுமுறை விடவேண்டும் என்று அரசாங்கத்தாரை வலியுறுத்துகிறோம்.

# ஈட்டி முனை

## பதில் எங்கே?

கவிச்சக்கரவர்த்தி கம்பர் தனது இராமகாதையில் தமிழகத்தையும், தமிழ்மக்களையும், தமிழ்ப் பண்பாட்டையும் எப்படிச் சிறப்பித்திருக்கிறார் என்ற பொருள் குறித்து 1954-ம் வருடத்தில் காரைக்குடி கம்பன் விழாவில் தோழர் ஜீவா ஆற்றிய சொற்பொழிவை 'கம்பன் கண்ட தமிழகம்' என்ற நூல் வடிவாக வெளியிட்டிருக்கிறோம். ஜனசக்தியிலும் தொடர்ச்சியாக வெளியிட்டோம். அதுமுதல், கம்யூனிஸ்டுகளை, குறிப்பாக தோழர் ஜீவாவை, இராமாயணவாதிகள் என்றும், புதிய பாகவதர் என்றும், மார்க்ஸிஸத்தை விட்டுவிட்டு இராமாயணத்தைத் தூக்கிக்கொண்டிருக்கிறார்களென்றும் தி. மு. க. அறிவுக் கொழுந்துகளெல்லாம் குற்றம் சாட்டி, தங்களுக்கே உரித்தான 'ஆ'வுக்கு 'ஆ'வை, 'ஈ'வுக்கு 'ஈ'வை அடுக்கு மொழியில் மட்டரகமாக வசை புராணம் பாடினார்கள்!

'இந்த தி. மு. க. தலைகளெல்லாம், கம்பனையும் ஜீவாவையும் திட்டுகிறார்களே தவிர, கம்பனைப் பற்றி ஜீவா என்ன எழுதினார் என்று குறிப்பிட்டு அதன்மீது தங்கள் மூளை வரிசைகளைக் காட்ட முன்வரவில்லை. இதை நாம் 'கம்பனும் வம்பனும்' என்ற தலைப்பில் 9-10-55-ல் சுட்டிக் காட்டியபிறகு, அதற்குப் பதில் கொடுக்கும்முறையில் 15-10-55-ல் தென்றல் ஆசிரியர் கண்ணதாசன் 1½ பக்கம் கட்டுரை தீட்டினார்,

அதில் ஒருவார்த்தைகூட ஜீவா எழுதிய 'கம்பன் கண்ட தமிழகத்துக்குப் பதில் கொடுக்கவில்லை. அதற்கு மாறாக, நம்மை "ரஷ்ய மாணவர், மாஸ்கோவில் மழை பெய்தால் இங்கு குடை பிடிப்பவர், கூத்தாடுபவர், கூலி பெறுபவர், துரோகிகள்" என்று திட்ட ஆரம்பித்துவிட்டார். நம்மை இப்படித் திட்டிவிட்டு, கம்பன்மீது ஒரு பாய்ச்சல் பாய்ந்திருக்கிறார் பாருங்கள்!

அதே கட்டுரையில், இந்த "கவிஞர் கோன்" எழுதுகிறார்: "கொங்கைக் குவியலும், மறைவிட மூட்டையும், வார்த்தை ஜாலமும், வர்ணனையும், கடவுளரின் மனைவி கலவிப் போர் நிகழ்த்தியதும், தவிர இராமகாதை சொல்லும் உயர்ந்த பண்புகள் என்ன இருக்கிறது" என்று எழுதியுள்ளார்.

கழுகு வானத்தில் பறந்தாலும், அதன்கண் என்னமோ குப்பைத் தொட்டியில் செத்துக் கிடக்கும் எலிமீதுதான் இருக்கும் என்பதற்கு இந்தக் கவிஞர் ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறார்.

தமிழுக்குப் பெருமை தந்து தமிழ் இலக்கியத்தை செழிக்கச் செய்த கம்பனை, இந்த தி. மு. க. தலைவர்கள் இழிவுபடுத்துவதை தமிழறிஞர்கள் அனுமதிக்கமாட்டார்கள்.

—ஐ. மா. பா.

### ஏ. ஐ. டி. யு. சி. தினம்

31-10-55ல் ஏ. ஐ. டி. யு. சி.யின் 35-வது ஆண்டுவிழாவைச் சிறப்பாகக் கொண்டாடுங்கள்.

**கே. டி. கே. தங்கமணி**
செயலாளர்
த. நா. தொ. ச. காங்கிரஸ்.

### இந்த வாரத்தில் வெற்றி

நகரசபைத் தேர்தலில் சென்றவாரம் வெற்றிபெற்ற கட்சி அபேட்சகர்களை வெளியிட்டிருந்தோம். இந்த வாரத்தில் கிடைத்த வெற்றிச் செய்திகள்:

திண்டிவனம் - நந்தகோபால்
பொள்ளாச்சி - எல். பழனிசாமி
- பழனியப்பன்
- ரங்கசாமி
திருச்சி - எம். கிருபாபுரி
- ஏ. எஸ். கிருஷ்ணமூர்த்தி
பழனி - பெரியசாமி

**கட்சி ஆதரவுபெற்றவர்கள்**

ஈரோடு - ராமசாமி
- சீனிவாசன்
- திருமதி ஜானகி
பொள்ளாச்சி - ஸ்ரீ விஜயராக வய்யங்கார்
திருச்சி - அற்புதசாமி

### வருந்துகிறோம்!

'குற்றவாளியைத் தண்டியுங்கள்' என்ற தலைப்பின்கீழ் 9-10-55ம் தேதி ஜனசக்தி இதழில் 9ம் பக்கம் 5வது பத்தியில் மன்னார்குடியில் தோழர் கே.பி. நடராஜன் 23-9-55ம் தேதியன்று தாக்கப்பட்ட செய்தி பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

மேற்கூறிய செய்தி தோழர் அனந்த நம்பியார் எம். பி. சென்னை முதலமைச்சருக்குக் கடிதம் எழுதியுள்ளார் என்ற தகவலை வெளியிட்டது. அந்த சம்பவத்தில் யார் குற்றவாளி என்று திட்டவட்டமாகக் கூறும் நோக்கத்துடன் எழுதப்பட்டதல்ல. இப்படி அர்த்தப்படுத்துவதற்கு அச்செய்தியில் இடம் இருக்குமேயானால் அந்தத் தவறுக்கு வருந்துகிறோம்.

—ஆசிரியர்

### திண்டுக்கல்லில் நமது கட்சி அபேட்சகர்கள்

| வார்டு | பெயர் | சின்னம் |
|---|---|---|
| 1வது வார்டு | கே. பிச்சைமுத்து | கதிர் அரிவாள் |
| 2வது ,, | கம்பர் A. ஆறுமுகம் | ,, |
| 11வது ,, | வாசுதேவன் | ,, |
| 12வது ,, | அய்யாவு | ,, |
| 14வது ,, | M. கருப்பையா | ,, |
| 15வது ,, | S. A. தங்கராஜன் | ,, |
| 30வது ,, | A. வனத்தையன் | ,, |
| 6வது ,, | வெங்கடசாமி (ரிசர்வ்) | ,, |
| 6வது ,, | ராமசாமி (பொது) | ஏணி |

### நமது ஆதரவு பெற்ற சுயேச்சையாளர்கள்

| | |
|---|---|
| 4வது வார்டு | M. மருதநாயகம் பிள்ளை |
| 5வது ,, | வீரபத்ர பிள்ளை |
| 7வது ,, | S. ராமகிருஷ்ணன் |
| 8வது ,, | A.B அப்துல் கபூர் |
| 10வது ,, | டாக்டர் S. குருசாமி |
| 13வது ,, | S. குப்பை பிச்சை |
| 18வது ,, | அழகர்ஸ்வாமி |
| 19வது ,, | வெங்கடேசன் |
| 21வது ,, | சின்னு என்ற மருதை |
| 25வது ,, | தங்கவேலு (தங்கய்யா) |
| 26வது ,, | முத்துராம் பிள்ளை |
| 28வது ,, | A.M. ஹஸன் |

நாம் ஆதரிக்கும் மற்ற அபேட்சகர்கள் விபரம் பின்னால் அறிவிக்கப்படும். தேர்தல் தேதி 27-10-1955

## ஏ ஐ டி யு ஸி அறைகூவல்...

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

தொழிற்சங்க காங்கிரசின் பொதுச்சபைக்கூட்டம் கவலைப்படுகிறது. இதனால் தேசமுழுவதுமுள்ள தொழிற்சங்க இயக்கத்துக்கு கவலை தரக்கூடிய மிகப் பெரிய அபாயம் ஏற்படப்போகிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பிக்குமிச்சமயத்தில், தொழில் அமைதி என்ற பேரால், ராணுவ மோஸ்தரில் சர்க்காரால் கட்டுப்படுத்தப்பட்ட தொழிற்சங்க ஸ்தாபனத்தை ஐ. என். டி. யு. சி. தலைமையில், இந்தியத்தொழிலாளி வர்க்கத்தின்மீது சுமத்த விரும்புகிறது.

ஏ. ஐ. டி. யு. சி.யின் ஜெனரல் கவுன்ஸில் கூட்டத்தில், விடுக்கப்படும் வேண்டுகோள் இதுதான்! தொழிற்சங்கங்களே! தொழிலாளர்களே! பம்பாய் சட்டத்தையும், அதுபோன்ற இதர சட்டங்களையும் உடனே ரத்துசெய்யவேண்டுமென்று கிளர்ச்சி செய்யுங்கள்! தேசத்திலுள்ள சகல மத்திய தொழிற்சங்கங்களையும் கலந்து, அவற்றின் உடன்பாட்டின்பேரில், ஒரு புதிய அகில இந்திய தொழில் உறவு சட்டம் கொண்டுவரப்பட வேண்டுமென்று கோருங்கள்!

### விறிட்டெழுவீர்!

இச்சட்டத்தால் பாதிக்கப்பட்ட தொழிலாளர்களே!

பம்பாய் சட்டத்தில் ஸ்ட்ரைக்கை சட்டவிரோதமாக்கும் ஷரத்துக்களை ரத்துசெய்க என்று கிளர்ச்சி செய்யுங்கள்!

15 சதமான பிரதிநிதித்வ சங்கத் தலைவர்கள் முதலாளிகளுடன் செய்துகொள்ளும் ஒப்பந்தத்தை, அவ்வொப்பந்தத்தால் பாதிக்கப்படும் தொழிலாளர்களின் மத்தியில் வைத்து, அதன்மீது ரகசிய ஓட்டெடுப்பு நடத்தி ஏற்றுக்கொண்ட பிறகுதான், அவ்வொப்பந்தம் நடைமுறைக்கு வரவேண்டுமென்று கோருங்கள்!

15 சதமான சங்கத்துக்கு சட்டப்படி கொடுக்கப்படும் பிரதிநிதித்வ அந்தஸ்து, அந்த தொழிற்சாலையிலுள்ள தொழிலாளர்களின் மத்தியில் இரண்டு வருஷத்திற்கொருதடவை ரகசிய ஓட்டெடுப்புமூலம் ஊர்ஜிதப்படுத்தப்படவேண்டும். எது பிரதிநிதித்வமுடைய சங்கம் என்ற பிரச்னையில் இரு சங்கங்களிடையே ஏதாவது தகராறு ஏற்பட்டால், எல்லாத் தொழிலாளர்களின் மத்தியில், ரகசிய ஓட்டெடுப்பு நடத்தி தீர்மானிக்கவேண்டும் என்று கோருங்கள்!

பிரதிநிதித்வ சங்கத்தின் நிர்வாகிகளையும் மானேஜிங் கமிட்டியையும், சங்க வருடாந்திர மகா சபைக் கூட்டத்தில், 51 சதமானத்திற்குக் குறையாத அங்கத்தினர்கள் மத்தியில் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

சங்க நிர்வாகிகளாக தேர்ந்தெடுக்கப்படுவதற்கு, சங்க அங்கத்தினர்கள் எவருக்கும் உரிமை இருக்கவேண்டும். அவர்களுடைய தகுதியைக் கேள்வி கேட்டுத் தடுக்கும் ஷரத்துக்கள் எதுவும் சங்க விதியில் இருக்கக்கூடாது.

மற்றும் 16-10-55ல் பம்பாய் கருப்பு சட்டத்தை எதிர்த்து, தொழிற்சங்க அங்கீகார தினம் கொண்டாட வேண்டுமென்றும் ஏ. ஐ. டி. யு. சி.யின் ஜெனரல் கவுன்ஸில் தொழிலாளர்களை அறைகூவியழைத்தது.

## மதுரை தேர்தல்...

(முதற் பக்கத் தொடர்ச்சி)

வழைக்கவேண்டும். தெருக்களுக்கு தியாகிகளின் பெயர்கள் சூட்டப்பட வேண்டும்.

### வரிக்கொடுமை

ஐந்தாண்டு திட்டப்படி 4 கோடி 62 லக்ஷம் ரூபாய்களை மதுரை மக்கள் வரியாகக் கொடுக்க வேண்டியிருக்கிறது. இந்த வரிக் கொள்கையை கம்யூனிஸ்ட் கட்சி எதிர்க்கும்.

100 ரூபாய்க்கும் குறைந்த வருமானமுள்ளவர்களுக்கு தொழில் வரி ரத்து செய்யவேண்டும். சைக்கிள், ரிக்ஷா, மாட்டு வண்டி, ஜட்கா, ஆடு, மாடு, நாய் ஆகியவற்றின்மீது இன்றுள்ள வரியைப் பாதியாகக் குறைக்கவேண்டும்.

### பணத்துக்கு வழி

ஹார்வி மில் முதலிய பிரம்மாண்டமான தொழிற்சாலை உட்பட எந்த தொழிற்சாலைக்கும் தொழில்வரி 250 ரூபாய்க்குமேல் நகரசபை வசூலிக்கக்கூடாது என்று சட்டமிருக்கிறது. அந்தச் சட்டத்தை திருத்தினால் நகரின் 356 தொழிற்சாலைகளில் ஏராளமாக தொழில்வரி கிடைக்கும்.

மோட்டார் லைசென்ஸில் ஒரு பகுதி, தமாஷா வரி ஆகியவை நகரசபைக்கு வேண்டும். மற்றும் பல யோசனைகளும் கூறப்பட்டுள்ளன.

### பொன்னான வாக்கு

மதுரை நகர மக்களே!

மேலே கண்ட திட்டங்களுக்காகப் போராட, கம்யூனிஸ்ட்களைத் தேர்ந்தெடுங்கள்! இதே போன்ற நல்ல நல்ல திட்டங்களை முன்வைத்து இதர நகரங்களிலும் போட்டியிடும் கட்சி அபேட்சகர்களுக்கு கதிர் அரிவாள் சின்னத்தில் குறியிட்டு, வெற்றிபெறச் செய்யுமாறு பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறோம்.

# தலையாட்டி தம்பிரான்களை நிலைநாட்டுவதற்கு

## சர்க்காரும் முதலாளிகளும் முயற்சி

### தோழர் ராமமூர்த்தி விளாசல்

**அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் தலைவர் திரு. வி. சக்கரைச் செட்டியார் தலைமையில், 16—10—55ல் சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில், தமிழ்நாடு தொழிற்சங்கம் சார்பில், தொழிற்சங்க அங்கீகார தினம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. தொழிலாளர் தலைவர் பி. ராமமூர்த்தி, 'முதலாளிகளின் கொள்ளை லாபத்தையும், அதை ஆதிரிக்க அவர்கள் செய்துவரும் முயற்சிகளையும், அதற்குத் தலையாட்டுவதற்காக ஐ. என். டி. யு. சி. சங்கங்களை அங்கீகரித்து, இதர சங்கங்களைச் சட்டவிரோதமாக்க காங்கிரஸ் சர்க்கார் செய்துவரும் முயற்சிகளையும் புள்ளி விபரத்தோடு அம்பலப்படுத்தி, இம்முயற்சியை முறியடிக்க தொழிலாளர்கள் அனைவரும் ஆர்ப்பாட்டம் செய்யவேண்டுமென்று முழங்கினர்.**

கூட்டம் ஆரம்பத்தில், பல தொழிற்சங்கங்களின் மிகப்பெரிய ஊர்வலம் ஒன்று உரிமை கோஷங்களை முழங்கிக்கொண்டு கடற்கரையை வந்தடைந்தது.

மேடைமீது தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் உப தலைவர்கள் எஸ். கிருஷ்ணமூர்த்தி எம். பி.யும் ஏ. எஸ். கே. அய்யங்காரும் அமர்ந்திருந்தார்கள்.

சென்னை நகரதொழிலாளிவர்க்கத்தின் சார்பில், ஒப்பற்ற தலைவர் வி. சக்கரை செட்டியாருக்கு தோழர் ஏ. எஸ். கே. மாலையணிவித்தபோது, ஆயிரக் கணக்கான தொழிலாளர்களும் பொதுமக்களும் ஆரவாரம் செய்து வாழ்த்தொலி கிளப்பினர்கள்.

#### சக்கரை செட்டியார்

தலைவர் சக்கரை செட்டியார் பேசுகையில் "வேதமோதிய அந்தணருக்கு ஒரு மழை, நீதி தவருத மன்னருக்கு ஒரு மழை, கற்பு தவருத மாதருக்கு ஒரு மழை பெய்யுமென்று நான் சிறு வயதில் படித்திருக்கிறேன். ஆனல் உற்பத்தியைப் பெருக்கி உலகத்தைக் காப்பாற்றும் தொழிலாளர்களுக்கு ஒரு மழையைக் காணேமே! எல்லாம் சுரண்டுகிறவர்களுக்குத்தான் மழைபெய்கின்றன. உண்மையான தொழிற்சங்கங்களைநசுக்கி, ஐ.என்.டி.யு.சி.வைக்க சர்க்கார் முயற்சி செய்கிறது. இதைச் சர்க்கார் கைவிடவேண்டும். தொழிலாளர்கள் அனுமதிக்கக்கூடாது. போராடுவதற்கு எல்லோரும் தயாராகவேண்டும்" என்று அறைகூவி யழைத்தார்.

#### பி. ராமமூர்த்தி

தொழிற்சங்க அங்கீகார தினம் ஏன் கொண்டாடுகிறோம்? நேரு சொல்லுகிறர், "முதல் ஐந்தாண்டு திட்டத்தை நிறைவேற்றி விட்டதாகவும், 2-வது திட்டம் போட்டிருப்பதாகவும், சோஷலிஸபாணி சமூகத்தை—அதாவது உண்மையான வைரமல்ல, இமிடேஷன் வைரம், அமைக்கப் போவதாகவும், வறுமையை எதிர்க்கும் மகாயுத்தத்தில் கலந்துகொள்ள வாரீர்!" என்றும் நேரு கூப்பிடுகிருர். வறுமையை எதிர்த்து

தொழிலாளிவர்க்கம் ஆரம்பம் முதல் போராடி வருகிறது. அந்தப் போராட்டம் அதற்குத் தேவை. முதல் திட்டத்தில் 80 லட்சம் பேருக்கு வேலை தருவதாகக் கூறினர்கள். 80 லட்சம் கிடக்கட்டும். 8 பேருக்காவது வேலை கொடுத்தார்களா? வேலை செய்து வந்தவர்களுக்கும் வேலை பறிபோனதைத்தானே பாக்கிறோம். வேலையில்லாத் திண்டாட்டம் முன்னைவிட அதிகரித்திருக்கிறதென்று நேருவும் தேஷ்முக்கும் ஒப்புக்கொள்ளுகிறர்கள்.

#### திட்டத்தாலா விளைச்சல்?

விவசாய உற்பத்தி 5 சதமானம் பெருகி யிருப்பதாகக் கூறுகிறர்கள். தாங்கள் போட்ட நீர்ப்பாசனத் திட்டங்களால்தான் இந்த அபிவிருத்தி என்று அவர்களால் கூறமுடியவில்லை. "அணைக் கட்டுகளால் கொஞ்சமாவது விளைந்திருக்கவேண்டும். பெரிய அளவுக்கு விளைச்சல் ஏற்பட்டது மழை பெய்ததினல்தான்" என்று திட்டக் கமிஷனே கூறுகிறது. திட்டம் போட்டதால்தானா மழை பெய்தது? அப்படியானல் இப்போது பெரிய திட்டம் போட்டிருப்பதினல்தானா பெரு மழைபெய்து நாடெல்லாம் வெள்ளக்காடாகிறது? எப்படியோ உற்பத்தி அதிகரித்தது! இதனல் யாருக்கு லாபம்? விவசாயிக்கா? இல்லை. "4, 5 ஏகர் நிலம்படைத்த விவசாயிகளெல்லாம், விலை வீழ்ச்சி காரணமாக பெரு நஷ்டத்துக்கு உள்ளாகியிருக்கிறர்கள்" என்று ரிசர்வ் பேங் அறிக்கையே கூறுகிறது. விவசாயிகள் அதிக உற்பத்திபண்ணுகிறர்கள் ஆனல் அவர்கள் வாங்கும் சாமான்களின் விலை அதிகமாக இருக்கிறது.

#### பாரி

45 ரூபாய்க்கு விற்ற கரும்பு 25 ரூபாயாகிவிட்டது. உடுமலைப் பேட்டையில் கரும்பை வெட்டவே இல்லை. காய்ந்துகிடக்கிறது. வெட்டினல் வெட்டுகூலி கூட கிடைக்காதே என்று விவசாயிகள் தலையில் கைவைத்து அழுகிறர்கள்.

வெள்ளைக்கார பாரிக் கம்பெனிதான் கரும்பு விலையை இவ்வாறு நிர்ணயிக்கிறது. ஆனல் சர்க்கரை விலையைக் குறைத்ததா? இல்லை. 27 லக்ஷம் ரூபாய்களை லாபமாக லண்டனுக்கு அனுப்பியுள்ளது.

#### ஹார்வி

ஹார்வி மில் நிர்வாகம் 87 லட்சம் மூலதனம் போட்டு, கடந்த 7 வருஷத்தில் 3 கோடி ரூபாய்க்கு மேல் லாபமடித்திருக்கிறது.

இதுபோல் கோவை முதலாளிகள் பலரும் வருஷந்தோறும் 4 லக்ஷம், 11 லக்ஷம், 20 லக்ஷமென்று லாபத்தை அதிகரித்துக் கொண்டிருக்கிறர்கள். இது எப்படி சாத்தியமாயிற்று?

விவசாயிகளின் பருத்தி விலையைக் குறைத்தார்கள. தொழிலாளர்களுக்கு போனஸை மறுத்தார்கள். விலைவாசி வீழ்ந்து விட்டதாகச் சொல்லி, மதுரையிலும் கோவையிலும் கிடைத்து வந்த 51 ரூபாய் பஞ்சப்படியை 38 ஆக வெட்டினர்கள். வேலையை விட்டுப் போனவர்களுக்குப் பதில் ஆள் போடாமலும், ஆள் குறைப்பு செய்து, மீதமுள்ளவர்களைக் கசக்கிப் பிழிந்து உற்பத்தியைப் பெருக்கினர்கள். நெசவாளிகளுக்கு நூல் விலையைக் குறைக்கவில்லை. மக்களுக்குத் துணி விலையைக் குறைக்கவில்லை. இவ்விதச் சுரண்டலினல் தான் இவர்கள் இவ்வளவு லாபம் அடித்தார்கள். இதனல்தான் லண்டனுக்கே துணி ஏற்றுமதி செய்து ஆங்கில முதலாளிகளை அலற வைக்க முடிகிறது.

#### சோஷலிஸ பாணி

தொழில் உற்பத்தி 38 சதமானம் அதிகரித்திருப்பதாக சர்க்கார் கூறுகிறது. 1951-ம் வருஷத்தில் பாக்டரிச் சட்டத்தின்கீழ் உள்ள தொழிலாளர்கள் 49 லட்சம் பேர் என்றும், 1954-ல் அவர்களது எண்ணிக்கை 47 லட்சமாகக் குறைந்துவிட்டதென்றும் சர்க்கார் கூறுகிறது. 2 லட்சம் பேர் ஆள் குறைப்பு செய்யப்பட்டும் முன்னைவிட 38 சதமானம் உற்பத்தி பெருகியிருக்கிறது. இது தானு சோஷலிஸ பாணி? இது தானு உங்களின் திட்டத்தின் லட்சியம்?

தேசிய வருமானம் 13 சதமானம் உயர்ந்திருப்பதாக தேஷ்முக் கூறுகிறர். இதன் அர்த்தம் என்ன? இந்த நாட்டின் தொழிலாளியின் வருமானம் உயர்ந்ததா? விவசாயி வருமானம் உயர்ந்ததா? நடுத்தர வர்க்கத்தாரின் வருமானம் உயர்ந்ததா? கிடையாது. முதலாளிகளின் வருமானத்தைத்தான் தேசிய வருமானம் என்கிறர்கள்.

#### வரம்பு எதற்கு?

இப்பொழுது போனசுக்கு வரம்பு கட்ட வந்துவிட்டார்கள். 3 மாதத்துக்குமேல் போனஸ் கிடையாதென்றும், நஷ்டமிருந்தாலும் அரை மாத போனஸ் தர வேண்டுமென்றும் ஐ.என்.டி.யு.சி. யுடன் கூட்டு பேரம் பேசுகிறர்கள்.

லாபம் லக்ஷம் லக்ஷமாய் உயர்ந்துகொண்டே வரும் சமயத்தில் போனஸுக்கு வரம்பு கட்டப்படுகிறது. நஷ்டமில்லாத காலத்தில் 'நஷ்டமிருந்தாலும்' என்று அழகாகப் பேசப்படுகிறது. லாபத்துக்கு வரம்பு இல்லை. வரம்பு கட்டி, தொழிலாளருக்குக் கொடுக்கச் சொல்லவில்லை நாங்கள். மீதியை சர்க்காரே எடுத்து தொழில் விருத்திக்குப் பயன்படுத்துக!

#### தலையாட்டிகள்

15 சத அங்கத்தினர்கள் இருந்தால் அந்த சங்கத்தை மட்டும் அங்கீகரிப்போம் என்கிறது சர்க்கார். முதலாளியே சந்தா கொடுத்து அணைவரையும் ஐ.என்.டி.யு.சி. சங்கத்தில் சேர்த்து விடலாம். மற்ற சங்கங்கள் மூச்சுவிடக் கூடாது. சட்ட விரோதம். ஒரு தொழிற் சங்கம் என்ற பேரால் தலையாட்டிச் சங்கத்தை நிலைநாட்டப் பார்க்கிறர்கள். மீதி 85 சதமானம் பேர் எதிர்த்தாலும் கவலைப்படப் போவதில்லை. தலையாட்டி தலைவர்கள் கோவில்பட்டியில் தொழிலாளருக்கு விரோதமாக போனஸ் பிரச்னையில் காட்டிக் கொடுக்கலாம், மற்றவர்கள் ஆட்சேபிக்கக் கூடாது.

அடக்குமுறையாலும் தொழிற்சங்கங்களை அடக்க முடியவில்லை என்ற நிலைமை ஏற்படுகிற சமயத்தில், இத்தகைய, துரோகத்தனமான செயலில் சர்க்கார் ஈடுபட்டிருக்கிறது.

கான்பூர் தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்து போராடியது போல, தமிழ் நாட்டுத் தொழிலாளர்களும் இதை முறியடிக்க ஒன்றுபடுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்" என்றர் பி. ஆர்.

பின்னர் திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தியும், ஏ. எஸ். கே. அய்யங்காரும் பேசினர்கள்.

---



## பதில் சொல்கிறேம்!

### 'கல்கி'யின் ஏமாற்றம்!

கே. ஆர். மூர்த்தி, சென்னை.

**கேள்வி:** இந்தியாவின் தென் பகுதிகளில் மொழிவழி ராஜ்யங்கள் அமைவதைக்கூட வரவேற்காமல் ராஜ்யப் புனரமைப்புக் கமிஷனின் சிபார்சுகளை 'கல்கி' அடியோடு எதிர்ப்பதன் காரணமென்ன? புனரமைப்பு என்ற பேச்சே எடுக்கக்கூடாது என்று கூறக் காரணமென்ன?

**பதில்:** அரசாங்க நிர்வாகம், நீதி நிர்வாகம், சட்டசபை, கல்வி போதனை அனைத்தும் தமிழ்மட்டும் தெரிந்தவர்களாலேயே நடத்தும் வாய்ப்பை அளிக்கிறதல்லவா! அதனல் சாதாரண மக்களும் இவைகளில் பங்குகொள்ளும் சந்தர்ப்பம் ஏற்படுகிறதல்லவா! இது 'கல்கி'க்கு பிடிக்கவில்லை. சாதாரண மக்களுக்குப் புரியும் விதத்தில் அரசாங்க நிர்வாகம் நடக்கலாமோ! அது 'பெரியவர்கள்' செய்யவேண்டிய காரியமல்லவா! வரவேற்காததின் காரணம் அதுதான்.

காலஞ்சென்ற 'கல்கி' ஆசிரியர் அவர்கள் இன்று உயிருடன் இருந்திருந்தால், பாரதி பரம்பரையிலே நின்று தமிழனின் உண்மையான அபிலாஷைகளை வானதிர முழங்கியிருப்பார்.

"தமிழ்திரு நாடுதன்னை பெற்றேரும்! பெற்றேரும்! என்று கொட்டடா முரசு! ஊதடா சங்க"மென்று முழங்கியிருப்பார்.

### இன்னுமா சந்தேகம்?

கே. டி. மூர்த்தி, சக்கரபட்டி

**கேள்வி:** மார்க்ஸியக் கொள்கைப்படி மொழிப்பிரச்னையைத் தீர்ப்பதென்றல் ஐக்கிய தமிழகத்தில் எந்த மொழி ஆட்சி மொழியாக இருக்கவேண்டும்?

**பதில்:** இன்னுமா உங்களுக்குச் சந்தேகம் தமிழ்! தமிழ்!! தமிழ் தான் ஆட்சி மொழி!

### அவசியம் படியுங்கள்

**கேள்வி:** மார்க்ஸிய வழியில் நிற்பவர் மதத்தைப் பொருத்த வரை எப்படி நடந்துகொள்ள வேண்டும்?

**பதில்:** மதத்தைப் பற்றி லெனின்' என்ற தலைப்பில் ஜனசக்தி பிரசுராலயத்தாரால் வெளியிடப்பட்ட நூலைப் படியுங்கள். தோழர் ஜீவா ஜனசக்தியில் எழுதிய தொடர் கட்டுரைகளையும் படியுங்கள்.

### பி.ஸி.ஜி. ஊசி!

வி. எஸ். காந்தி, நாங்குனேரி

**கேள்வி:** பி.ஸி.ஜி. ஊசி குத்துவது பற்றி உங்கள் அபிப்பிராயமென்ன?

**பதில்:** இதைப்பற்றி டாக்டர்கள் அபிப்பிராயம் கூறுவதுதான் நல்லது. ஆனல் இன்று இதைப் பற்றி ஆதரவு, எதிர்ப்புக் கிளர்ச்சியில் தீவிரமாக ஈடுபட்டிருப்பவர்கள் வைத்தியம் தெரியாத நபர்கள்தான்.

### 'விடுதலை'யில் மணமகன்!

கே. சந்திரன், அமைந்தகரை.

**கேள்வி:** "மூன்றும் பாரம்வரையில் படித்த 19 வயதுள்ள நாயுடு வகுப்பைச் சேர்ந்த மணமகளுக்குப் படித்த சர்க்கார் உத்தியோகத்திலிருக்கும் நாயுடு வகுப்பைச் சேர்ந்த மணமகன் தேவை" என்று 14-10-55 விடுதலை முதல் பக்கத்தில் விளம்பரம் செய்திருக்கிறதே! இந்த விளம்பரம் செய்தவரும் ஒரு நகர திராவிட கழகச் செயலாளர். ஒரு நாயுடு பெண்ணுக்கு நாயுடு மாப்பிள்ளையே பொறுக்கி எடுக்க ஒரு தி.க. தலைவர் செய்யும் முயற்சிக்கு தி.க. ஏடு பிரபலமாக விளம்பரப்படுத்துகிறதே! இதுதான் இவர்களது ஜாதி ஒழிப்பு லட்சணமா?

**பதில்:** இந்தக் கேள்வியை பெரியார் ஈ. வே. ரா., பீரான் சாகிப் தெரு, மவுண்ட் ரோடு, சென்னை என்ற விலாசத்திற்கு அனுப்புங்கள்.

### இரும்புத்திரை!

வி. பாண்டியன், பாண்டி.

**கேள்வி:** சோவியத் நாட்டில் இரும்புத்திரை இருக்கிறதா?

**பதில்:** "இரும்புத் திரையுமில்லை. எந்தத் திரையுமில்லை" என்று அங்கு சென்று திரும்பிய பிரதமர் நேரு கூறினரே அதை நீங்கள் படிக்கவில்லையா?

அணு சக்தியை உற்பத்திசெய்யும் ரகசியந்தான் உலகில் இது வரை பரம ரகசியமாக இருந்து வந்தது. அதை பிரதமர் நேருவிற்கும், இந்தியத் தூதுகோஷ்டியினருக்கும், பார்க்கவிரும்பிய சகல அங்கியநாட்டினருக்கும் முதன் முதலில் காட்டியது சோவியத் யூனியன்.

இதுவரை சோவியத்தைச்சுற்றி இரும்புத் திரையைப் போட்டது ஏகாதிபத்திய-முதலாளித்துவ நாடுகள். அதைத் தகர்த்தெறிந்தது சோவியத் யூனியன். அதன் பலன்தான் இன்று இந்தியாவிற்கு சோவியத் யூனியன் பிரதமர் விஜயம் செய்வதாகும்.

### பனம்பள்ளியின் பச்சைப் பொய்!

பி. எஸ். பாப்பா, கம்பம்.

**கேள்வி:** திரு. கொச்சி சட்டசபையில் முதன் மந்திரி பனம்பள்ளி கோவிந்த மேனன் மதுரையில் கூடிய கம்யூனிஸ்ட் கட்சி மகாநாடு "தனது லட்சியங்களை அமைதியான சட்டசபை வேலைத் திட்டத்தின் மூலம் அடைய முடியாது. புரட்சி செய்வதின்மூலமே ...ஆயுதப்புரட்சியில் எப்போது எங்கே எப்படி ஈடுபடுவது என்பதன்மூலமே அடைய முடியும்" என்று முடிவெடுத்திருப்பதாகவும் இதற்கு அத்தாட்சியாக "இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் வரலாறு," "மதுரையில் சதித் திட்டம்" என்ற இரண்டு நூல்களைக் காட்டியதாகவும் பேசியிருக்கிறதே! இவ்விதப் பேச்சு உண்மையா? பொய்யா?

**பதில்:** இது விஷமத்தனமான பொய் என்று அன்றே கம்யூனிஸ்ட் தலைவர் டி. வி. தாமஸ் பதிலளித்தார்.

காங்கிரஸ் மிற்போக்குக் கொள்கை ஒவ்வொன்றுக்கும் மாற்று கம்யூனிஸ்ட்கட்சி வைக்கும் மாற்று யோசனைக்கு பதிலளிக்க முடியாமல் இவ்விதப் பொய் பிர

(9-ம் பக்கம் பார்க்க)

# ராஜ்ய புனரமைப்பு அறிக்

# வெற்றிகளும் குறைபாடுகளும்

## ஈ.எம்.எஸ். நம்பூதிரிபாட்



**"மொழிவழி ராஜ்யங்கள் அமைவதா! அது நாட்டைத் துண்டாடிவிடுமே என்று தர்க்கம் புரிந்தவர்கள், இன்று பஸல் அலி கமிஷன் சிபார்சுகளின் பின்னணியில் முட்டாள் பட்டம் கட்டிக்கொள்ளும் நிலையில் காட்சியளிக்கிறார்கள்" என்று ராஜ்யப் புனரமைப்புக் கமிஷன் முடிவுகளை விமர்சனம் செய்யும் முறையில் தோழர் ஈ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் 'நியூ ஏஜ்' வாரப்பத்திரிகையில் எழுதியுள்ள ஒரு கட்டுரையில் கூறுகிறார்:**

மஹாராஷ்டிரம், குஜராத், பஞ்சாப் மூன்று பகுதிகளைத் தவிர இதர பகுதிகளில் மொழிவழி ராஜ்யங்கள் அமைப்பது சம்பந்தமான கோரிக்கைக்கு கமிஷன் இணங்கியிருக்கிறது. அப்படியிருந்தும் நாட்டில் உள்ள ராஜ்யங்களின் தொகை 28-லிருந்து 16 ராஜ்யங்களாகவும், மூன்று பிரதேசங்களாகவும் குறைந்திருப்பதைக் காணலாம்.

### ராஜ்யங்கள் அதிகரியாது

மேலே குறிப்பிட்ட மூன்று பகுதிகளிலும் மொழிவழி ராஜ்யக் கொள்கை அங்கீகரிக்கப்பட்டால் அப்பொழுதும் ராஜ்யங்களின் தொகை அதிகரிக்காது. இப்போதுள்ள அளவிலேயே நிற்கும். சம்யுக்த மகாராஷ்டிரம், மஹா குஜரத் ராஜ்யங்கள் உருவாக்கப்பெற்றால் இன்று நிர்ணயிக்கப்பட்டுள்ள கூட்டு பம்பாய் ராஜ்யமும், சிறிய ஒரு மொழி விதர்ப்ப ராஜ்யத்திற்கும் பதிலாக இரு ராஜ்யங்களாக அமையும்.

பஞ்சாப்பைப் பொறுத்த வரையில் – இரு மொழி பேசப்படும் பஞ்சாப் ராஜ்யமும், மத்திய சர்க்கார் நிர்வாகத்திலுள்ள டெல்லி ராஜ்யமும் இருக்கவேண்டு மென்பது கமிஷன் சிபார்சு. இதற்குப் பதிலாக இரு மொழிவழி ராஜ்யங்களாக்கி–பஞ்சாபி மொழி பேசப்படும் ராஜ்யத்தை ஒன்றாகவும், ஹிந்தி பேசப்படும் பகுதிகளை ஹிந்தி பேசப்படும் டெல்லி ராஜ்யத்துடன் இணைத்தும் புனரமைப்புச் செய்தல்வேண்டும்.

எனவே, திரும்பத் திரும்ப நாடு துண்டாடப்படுகிறது என்ற பல்லவிக்கு இதோடு முடிவு கட்டவேண்டும். மேலும் மொழிவழி ராஜ்ய அமைப்புடன் நெருங்கிய தொடர்புள்ள ஜனநாயக சீர்திருத்தங்களும் இதன் விளைவாக வருகின்றன. ராஜப் பிரமுகர் பதவிகளை ஒழித்துக் கட்டுவது, ஏ, பி, சி, பிரிவு ராஜ்யங்களிடையே நிலவிவந்த ஏற்றத் தாழ்வுகளை அகற்றுவது, ராஜ்ய எல்லைகள் விஷயத்தில் பகுத்தறிவுக்கு ஒவ்வாத சிக்கல்களைத் தீர்ப்பது போன்ற சீர்திருத்தங்கள் இதன்பாற்படும்.

### உதவாக்கரை பொழுதுபோக்கு

எனவே இந்த கட்டத்தில் இக்கமிஷன் ஒருசில உதவாக்கரை பொழுதுபோக்கு வாதங்களைக் கிளப்பிக்கொண்டிருப்பது ஆச்சரியமாக இருக்கிறது. உதாரணமாக: மொழிவழி ஒற்றுமை "ஆட்சி நிர்வாக வசதிகளுக்கும், திறமைக்கும் உறுதுணையாக நிற்கும் முக்கியமான அம்சமா?" அல்லது அது ஆட்சி நிர்வாகம், நீதி, அரசியல் முதலிய எல்லா அம்சங்களையும் தாண்டி மேலோங்கி நிற்கும், தனிச்சிறப்புள்ள கட்டுப்படுத்தக்கூடிய ஒரு கோட்பாடா?" என்ற கேள்வியை எழுப்பியிருக்கிறது.

ராஜ்யப் புனர் நிர்மாணப் பிரச்சினையை நடுநிலைமையாக நின்று பார்க்கும் எவருக்கும் இது கேள்வியைத் தவறான முறையில் முன் வைக்கும் போக்கு என்பதைக் காண முடியும். ஏனென்றால், மொழிவழி ஒற்றுமை என்பது "தனிச்சிறப்புள்ள கட்டுப்படுத்தக்கூடிய கோட்பாட்டில்" ஒரு கோட்பாடா? என்ற கேள்வி, மொழிவழி ஒற்றுமை "இதர ஆட்சி நிர்வாக நிதி, அரசியல் அம்சங்களுடன்" முரண்படுமானால் மட்டுமே எழவேண்டிய ஒரு கேள்வி.

இத்தகைய முரண்பாடுகள் இல்லையென்பது இப்போது நிரூபிக்கப்பட்டுவிட்டது. கமிஷன் சிபார்சுகளையும், கமிஷன் முன் பாக கம்யூனிஸ்ட் கட்சி சமர்ப்பித்த யாதாஸ்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இது விளங்கும். மொழிவழி ஒற்றுமையை அடிப்படையாகக்கொண்ட சம்யுக்த மகாராஷ்டிரம், மகா குஜரத், பஞ்சாப் விஷயத்தில் உள்ள வேற்றுமைகளைத் தவிர, இதர விஷயங்களில் உள்ள வேறுபாடுகள் பின் வருவனவாகும்.

### வேறுபாடுகள்

★ கட்சி, விசாலாந்திரம் அமையவேண்டும் என்று ஆலோசனை கூறுகிறது. கமிஷன் இரண்டு தெலுங்கு ராஜ்யங்கள் அமைக்கச் சிபார்சு செய்கிறது. இதிலும்கூட விசாலாந்திர கோட்பாட்டை கமிஷன் அங்கீகரித்திருப்பதைக் குறிப்பிடவேண்டுவது அவசியம். அதனால்தான் 1961 பொதுத் தேர்தலுக்குப் பின்னால் தெலிங்கான பிரதேச சட்டசபை உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பகுதிப் பெரும்பான்மையினர் உடன்பட்டால் விசாலாந்திரம் அமைக்கலாம் என்று சிபார்சு செய்கிறது.

★ மத்திய இந்தியாவில் இரண்டு ராஜ்யங்கள் அமைக்கப்படலாம் என்பது கட்சியின் கருத்து. முதலாவதாக ஹிந்திமொழி பேசும் மத்தியப்பிரதேசப் பகுதிகளும், விந்தியப்பிரதேசமும் சேர்ந்தராஜ்யம். இரண்டாவது மத்திய பிரதேசமும் போபாலும் சேர்ந்த ராஜ்யம். கமிஷனோ இவை இரண்டையும் சேர்த்து ஒரே ராஜ்யமாக நாட்டிலேயே பரப்பில் மிகப் பெரிய ராஜ்யமாக அமைக்கச் சிபார்சு செய்திருக்கிறது. இங்கு மொழிவழி ஒற்றுமைக்கும் இதர கோட்பாடுகளுக்கும் எவ்வித முரண்பாடும் கிடையாது.

★ ஹிமாசலப் பிரதேசம், திரிபுரா, மணிப்பூர் இவை தனி ராஜ்யங்களாக இயங்கவேண்டுமென்பது கட்சியின் கருத்து. ஆனால் கமிஷன் திரிபுராவை ஆஸாமுடனும், ஹிமாசலப் பிரதேசத்தைப் பஞ்சாபுடனும் இணைக்கவேண்டுமென்று சிபார்சு செய்திருக்கிறது. ஆனால் இப்பகுதிகளுக்கு மத்திய சர்க்காரிலிருந்து பாதுகாப்பும், பொருளாதார அபிவிருத்திக்கு உதவியும் அளிக்கப்படவேண்டுமென்பதைக் கமிஷன் எடுத்துக் காட்டியிருக்கிறது.

கட்சியின் கருத்துக்கும் கமிஷன் முடிவுக்கும் உள்ள வேற்றுமை என்ன? இந்த ராஜ்யங்கள் எல்லாவற்றிலும் மத்திய சர்க்காரின் அதிகாரம் இருக்க வேண்டும் என்று காண்கிறது கமிஷன். கட்சியோ அதிகாரம் ஜனநாயகமயமாக்கப்பட வேண்டும் என்று கோருகிறது. ஒருசில விசேஷ நிபந்தனைகளின்பேரில் மணிப்பூரையும் திரிபுராவையும் இணைக்கலாம் என்பதையும் கட்சி கண்ணோட்டத்தில் கொண்டிருக்கிறது.

வேறு சொற்களால் கூறப்போனால்—கம்யூனிஸ்ட் கட்சியின் ஸ்தூலமான ஆலோசனைகளை அங்கீகரிக்கும் விஷயத்தில் கமிஷன் நெடுந்தூரம் உடன்பட்டு வந்திருக்கிறது; அதேசமயத்தில் மொழிவழி ராஜ்யக் கொட்பாட்டை அங்கீகரிக்கவில்லை என்னலாம்.

### கற்பனை வாதத்திற்கு

மொழிவழி ராஜ்யக் கோரிக்கையாளர்களின் வாதம் என்று கற்பனை செய்துகொண்டு பல தர்க்கங்களைத் தகர்க்க முன்வருகிறது. இந்தியாவின் ஐக்கியமும் பந்தோபஸ்தும் இன்றியமையாதவை என்று எடுத்துக்காட்ட விரிந்த பரந்த காரணங்களைத் தொகுத்துக் கூறுகிறது; நிதி விஷயத்தில் போதுமான வசதி இருக்க வேண்டும் எனவும், நமது கண்ணோட்டம் குறுகிய பிரதேச பக்தியில் கவிழ்ந்துவிடாமல் தேசிய ரீதியில் இருக்கவேண்டும் எனவும் வலியுறுத்துகிறது:

★ இரு மொழி மும்மொழிகள் பேசப்படும் ராஜ்யத்தை மொழிவழி ராஜ்யமாகப் புனரமைத்தால் மத்திய சர்க்காருக்கும் ராஜ்யங்களுக்குமிடையே உள்ள உறவு மாறிவிடும்போலும்!

★ இருமொழி மும்மொழிகள் பேசப்படும் ராஜ்யங்களில் பிரதேச மனப்பான்மை இல்லையா? அவற்றின் கண்ணோட்டம் தேசிய ரீதியில்தான் இருக்கிறதுபோலும்!

★ செயற்கை ரீதியில் சிருஷ்டிக்கப்பட்ட இரு மொழி, மும்மொழி பேசும் ராஜ்யங்களில் மக்களை நிர்ப்பந்தமாக நீடித்துவாழச் செய்தால்தான் தேசத்தின் ஐக்கியத்திற்கும் பந்தோபஸ்திற்கும் உத்தரவாத மூண்டு போலும்!

பம்பாய் ராஜ்யத்தை எடுத்துக் கொள்வோம். இரு மொழி பேசும் ஒரு ராஜ்யத்தை கமிஷன் சிபார்சு செய்திருக்கிறது. இதற்குக் காரணமென்ன? இந்தியாவின் தேசிய ஐக்கியமா? பந்தோபஸ்தா? நிதிநிலையில் போதுமான வசதி வேண்டுமென்பதா? பிரதேச மனப்பான்மைக்கு எதிரான தேசியக் கண்ணோட்டமா? எது காரணம்?

### தலைவணங்கியதே காரணம்

பம்பாய் நகரம் சம்யுக்த மஹாராஷ்டிர ராஜ்யத்தில் ஒரு பகுதியாகத் திகழ்வதை பம்பாயிலுள்ள பெருமுதலாளிகள் அனுமதிக்க விரும்பவில்லை. இந்த ஒரே காரணத்தினால்தான் மஹாராஷ்டிர மக்களின் சம்யுக்த மஹாராஷ்டிர ராஜ்யக் கோரிக்கையைக் கமிஷன் நிராகரித்திருக்கிறது. கமிஷன் பட்டவர்த்தனமாக ஒப்புக்கொண்டுள்ள கூற்று இது.

பம்பாயிலுள்ள குஜராத்தி மஹாராஷ்டிரப் பிரதேசங்களைப் பிரித்துவிட்டால் பம்பாய் நகரத்தின் வருங்காலம் மிக மிகக் கஷ்டமான ஒரு பிரச்சினையாகித் தீரும் என்கிறது கமிஷன். இந்தக் கஷ்டமானபிரச்சினையை, ஆந்திர ராஜ்ய அமைப்பின்போது இதேபோன்ற ஒரு கஷ்டமான பிரச்சினையாக இருந்த சென்னை நகரப் பிரச்சினையைத் தீர்த்து வைத்ததுபோலத் தீர்த்து வைப்பதற்குக் கமிஷன் விரும்பவில்லை. பம்பாய் பெருமுதலாளிகளின் நிர்ப்பந்தத்திற்குத் தலைவணங்கியதே இந்த முடிவுக்கு மூல காரணம்.

பம்பாய் நகரம் சம்யுக்த மஹாராஷ்டிர ராஜ்யத்தில் ஒரு பகுதியாக இருப்பது இந்தியாவின் ஐக்கியத்திற்கும் பந்தோபஸ்திற்கும் பாதகமானது என்று கற்பனைக் காற்றூடி விடுவோர்கூடச் சொல்லமுடியாது. வங்காளியரல்லாத வர்த்தகர்கள் கல்கத்தாவில் தமது அலுவல்களை நடத்த முடியுமானால், தமிழரல்லாதார் சென்னையில் வர்த்தகமும் தொழிலும்செய்ய முடியுமானால், அதேபோல வங்காளியரல்லாத, தமிழரல்லாத தொழிலாளர் இரு நகரங்களிலும் வேலை தேடித் தொழில் புரியக்கூடுமானால், மஹாராஷ்டிரரல்லாத வர்த்தகரும், தொழிலதிபரும், தொழிலாளரும், ஊழியர்களும் பம்பாயில் திண்டாட நேருமா? நேராது.

### சந்தர்ப்பவாதம்

இந்திய மக்கள் அனைவருக்கும் பொதுவான பிரஜா உரிமை இருக்கிறது. எல்லோரும் சரிநிகரான இந்தியப் பிரஜைகள். நாட்டின் எந்தப் பகுதியிலும் வாழ்ந்து தொழில்புரிய உரிமையுண்[…] என்று இந்திய[…]ின் ஐக்கியத்[…] வலியுறுத்திக் [கூ]றுகிறது க[…]ஷன். இந்த [வா]தங்களே மஹா[…] ராஷ்டிரரல்லாத[…]ர் பம்பாயி[…] தொழில் புரிந்து வாழத்தடை ஏ[…]மில்லை என்று எடுத்துக்காட்ட[…] போதுமானவை.

இதை எடுத்து[க்]காட்டாமல், சி[…] பெரு முதலாளி[க]ளின் நிர்ப்பந்த[…]திற்கு சரணாக[தி] யடைந்து ஒ[…] சிறுபான்மை [..] மொழியினரை[…] பெரும் பான்மை மொழியின[…] மீது திணிக்கிற[து] கமிஷன்.

பம்பாய் ச[ம்ப]ந்தமாக அறிக்[கை]யில் உள்ள சி[பா]ர்சுகள் படுமோ[…]மான சமயசந்[த]ர்ப்ப வாதத்திற்[கு] ஓர் உதாரணம்.

குஜராத்தி மொழி பேசும் ம[க்]கள் ஒரே ராஜ்யத்தில் தமது மஹாராஷ்டிர சகோதரர்களுடன் தேசிய நலத்தையும், பம்பாய் ந[க]ரின் நலத்தையும் உளத்தி[ல்] கொண்டு சௌஜன்யமாக வாழ[…] வார்கள் என்று குஜராத் பிரதே[ச] காங்கிரஸ் கமிட்டி உறுதியளி[த்]துள்ளதை கமிஷன் பாராட்[டு]கிறது. இதன்மூலம் பம்பா[ய்] சம்யுக்த மஹாராஷ்டிர ராஜ்ய[த்]தில் ஒரு பகுதியானால் இப்படியே[…] சௌஜன்யமாக குஜராத்திய[…] வாழ முடியாது என்ற வாத[த்]திற்கு வளமிடுகிறது கமிஷன்.

ஒரு ராஜ்யத்தில் வாழ்ந்தா[ல்] மஹாராஷ்டிரர் ஜனத் தொகை[…]யில் 44 லிருந்து 48 சத விகித[…] அதிகரிப்பார்கள் என்றும், பம்பாய் ராஜ்யத்தில் உள்ள 402 லட்[…]சம் மக்களில் [..]3 லட்சம் மஹா[…]ராஷ்டிரர்களாக இருப்பார்கள் என்றும் உள்ளொன்று வைத்து[…]

# தேசிய சுதந்[…]

## ஐக்கிய முன்னணியும் […]

**கேள்வி:** ஏகாதிபத்திய கால கட்டத்தில், காலனி அல்லது அரைக்காலனிகளிலுள்ள மக்கள் தொழிலாள வர்க்கத் தலைமையின் கீழ் மாத்திரமே தேசீய சுதந்திரத்தை அடைமுடியுமென்று மார்க்ஸிஸம்-லெனினிஸம் போதிப்பது போல் தெரிகிறது. இருந்தபோதிலும், மத்தியக் கமிட்டித் தீர்மானம் இந்தியா ஒரு சுதந்திர நாடு என்று விவரிக்கிறது. இந்தியாவில் தொழிலாள வர்க்கத் தலைமை இன்னும் ஏற்பட்டிராததால், இந்தியாவின் அந்தஸ்தைப்பற்றி இவ்வாறு விவரிப்பது மார்க்ஸிஸ-லெனினிஸத்தைத் திரித்துக் கூறுவதாகாதா?

**பதில்:** இந்தியா ஒரு சுதந்திர நாடு என்று மத்தியக் கமிட்டி வரையறுத்திருப்பதானது, காலனிப் புரட்சிகளைப்பற்றிய மார்க்ஸிஸ-லெனினிஸ ரோதனைகளை எவ்விதத்திலும் திரித்துக் கூறுவது ஆகாது என்று நான் நினைக்கிறேன்.

இன்றைய கால கட்டத்தில், காலனி நாடுகளில் உள்ள முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சியின் கடமைகளைப் பூர்த்திசெய்ய முடியாது என்றுதான் மார்க்ஸிஸ-லெனினிஸம் போதிக்கிறது. இந்த வரையறுப்பு இன்றும்கூட பூரணமாகப் பொருந்துகிறது.

சீனவில் தேசீய முதலாளிகளின் பாத்திரத்தை விவரிக்கும்போது, தோழர் மாசேதுங் இந்த அம்சத்தை அழுத்திக் கூறினார். அவர் சொன்னதாவது: 'தேசீய முதலாளிகள் ஒரு புரட்சியில் பங்கெடுக்கும்பொழுதுகூட, ஏகாதிபத்தியத்துடன் இருக்கும் தொடர்பைப் பரிபூர்ணமாக அறுத்துக்கொள்ள விரும்புவதில்லை. மேலும் கிராமப்புறங்களில் நிலக்குத்தகை முதலியவைமூலம் நடக்கும் சுரண்டலுடன் நெருக்கமாக உறவு கொண்டுள்ளது. இவ்வாறாக, ஏகாதிபத்தியத்தை முற்றிலும் தூக்கி எறிவதற்கு அதற்கு விருப்பமில்லை; திறனுமில்லை. நிலப்பிர[பு]த்துவ சக்திகளைப் பொறுத்த வரையில் இது இன்னும் மோசம். ஆதலால், சீன முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சியின் இரண்டு அடிப்படையான பிரச்னைகளில் அல்லது இரண்டு அடிப்படையான கடமைகளில் ஒன்றைக்கூட சீன தேசீய முதலாளிகளால் தீர்க்கமுடியாது அல்லது அடையமுடியாது.

(செலக்டட் ஒர்க்ஸ், வால்யூம் 3, பக்கம் 117. அழுத்திக் கூறியது நான்)

### மேலும் மேலும் சுதந்திரக் கொள்கை

எனினும், முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சி பூர்த்திசெய்யப்படுவதை, ஒரு தேசம் சுதந்திர அரசியல் அந்தஸ்து அடைவதுடன் சமப்படுத்திச் சொல்லக் கூடாது.

1947ல், இந்தியா பெயரளவுக்கு சுதந்திர தேசம் என்ற அந்தஸ்தை அடைந்தது. அதற்குப் பின்னால் முக்கியமான பல அபிவிருத்திகள் ஏற்பட்டிருக்கின்றன. சீனவில் மக்கள் புரட்சியின் வெற்றி, ஆசிய விடுதலை இயக்கங்களின் சக்திமிக்க வளர்ச்சி, சோஷலிஸ முகாமும், சோஷலிஸ உலக மார்க்கெட்டும் பிரம்மாண்டமாக பலமடைந்தது, ஏகாதிபத்தியம் பலவீனமடைதல், அதனுடைய அரசியல் ராணுவப் பெருந் தோல்விகள், இந்தியாவிற்குள் ஜனநாயக இயக்கத்தின் வளர்ச்சி முதலிய அபிவிருத்திகள் ஏற்பட்டிருக்கின்றன. இந்த அம்சங்களினால் உதவியளிக்கப்பட்ட இந்திய சர்க்கார் தன்னுடைய அரசுரிமையை மேன்மேலும் அதிகமாக அழுத்தி வலியுறுத்துவது சாத்தியமாகியுள்ளது; இதர அரசாங்கங்களைப் பொறுத்த வரையில், மேன்மேலும் அதிகமான சுதந்திரக் கொள்கையைக் கடைப்பிடிப்பது சாத்தியமாகிறது. நடைமுறை விஷயங்களுக்காக, இந்தியா ஒரு சுதந்திர நாடு என்று

# சரித்திரத்தில் ஓர் புதுமை

## ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு

ஜெர்மனியின் வரலாற்றிலேயே முதன் முதலாக ஜெர்மன் தொழிலாளி வர்க்கம்-விவசாயி மக்களின் அதிகாரத்தின் கீழ் உடலெடுத்துள்ள ஜெர்மன் ஜனநாயகக் குடியரசின் ஆறுவது ஆண்டு விழா அக்டோபர் 7ந் தேதியன்று கொண்டாடப்பட்டது. ஜெர்மனியின் வளர்ச்சியில் ஒரு நவீன யுகத்தைப் புகுத்தியுள்ள சாதனை இது. நீண்ட நெடுங்காலப் போராட்டங்களுக்குப் பிறகு ஜெர்மன் மக்கள் முன்னால் ஜனநாயகத்திற்கும் சுதந்திரத்திற்குமான ராஜபாட்டை திறக்கப்பட்டது. இதர நாட்டு மக்களுடன் நட்புறவுடன் இணைந்து நின்று சமாதான பூர்வமாகக் கூட்டுறவுகொள்ளும் சூழ்நிலை ஸ்தாபிக்கப் பெற்றது.

இதை சாதனையாக்கிய சோஷலிஸ்ட் ஐக்கிய கட்சியையும் அதன் கொடிக்கீழ் அணிவகுத்து நின்ற ஜெர்மன் மக்களையும் பாராட்டுகிறோம். கம்யூனிஸ்ட் கட்சியும் சமூக ஜனநாயகக் கட்சியும் மார்க்ஸிய லெனினிஸ அடிப்படையில் இணைந்தே சோஷலிஸ்ட் ஐக்கிய கட்சி உருவாயிற்று. நடைமுறையில் ஏற்பட்ட இந்த ஒற்றுமையின் விளைவாகத்தான் ஜனநாயகக் குடியரசு மலர்ந்தது.

1918–1939 இரு தடவைகளிலும் இரு உலக யுத்தக் கொலைக் காண்டங்களைக் கட்டவிழ்த்து விட்டு உலகில் எல்லையற்ற நாசத்தை விளைந்த ஜெர்மனியில், ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு சமாதானத்தின் செங்கோட்டையாகத் திகழ்கிறது; காவலனாகக் காட்சிளிக்கிறது. சோவியத் யூனியன் அளித்துள்ள தன்னலமற்ற உதவியால் தொழிலபிவிருத்தி யடைந்து மக்களுக்குப் புது வாழ்வளித்துள்ளது. "கை வலுத்தவன் பக்கம் நியாயம்" என்ற ஏகாதிபத்தியக் கோட்பாட்டை அறைகூவும் சமாதான சக்தியாக விளங்குகிறது.

மார்க்ஸ்–ஏங்கல்ஸ் என்னும் இரு மணிகளை உலகினுக்கே தந்து வான்புகழ் பெற்ற ஜெர்மனியில் இன்று ஒரு பகுதியில் ஜனநாயகக் குடியரசு மலர்ந்திருப்பது உலக முக்கியத்துவம் உடையது. உள் விவகாரங்களிலும் ஜெர்மன் சமஷ்டிக் குடியரசுடன் சுதந்திரமாக உறவு பூணவும் பரிபூர்ண அரசுரிமையுடன் விளங்கும் இக் குடியரசு ஜெர்மனியை ஐக்கியப்படுத்தியே தீரும்.

ஐக்கிய ஜனநாயக ஜெர்மனி சமாதானத்திற்கு உத்தரவாதம். ஐரோப்பா கண்டத்தில் யுத்தக் கோஷம் மூட்டுவோருக்கு மரண அடி. இதன் சர்வதேச முக்கியத்துவம்இதுதான். ஆறுவது ஆண்டு விழா சந்தர்ப்பத்தில் ஜெர்மன் மக்களை மனதார வாழ்த்துகிறோம்! வாழ்க ஜெர்மன் மக்கள் குடியரசு! வெல்க சமாதானம்!

# அறிக்கை

தொழில்புரிய உரிமையுண்டு என்று இந்தியாவின் ஐக்கியத்தை வலியுறுத்திக் கூறுகிறது கமிஷன். இந்த [illegible]தங்களே மஹாராஷ்டிரரல்லாத[illegible]ர் பம்பாயில் தொழில் புரிந்து வாழத்தடை ஏதுமில்லை என்று எடுத்துக்காட்டப் போதுமானவை.

இதை எடுத்துக்காட்டாமல், சில பெரு முதலாளி[illegible]ளின் நிர்ப்பந்தத்திற்கு சரணாக[illegible] யடைந்து ஒரு சிறுபான்மை மொழியினரைப் பெரும் பான்மை மொழியினர் மீது திணிக்கிற[illegible] கமிஷன்.

**பம்பாய் ச[illegible]ந்தமாக அறிக்கையில் உள்ள சி[illegible]ர்சுகள் படுமோசமான சமயசந்தர்ப்ப வாதத்திற்கு ஓர் உதாரணம்.**

குஜராத்தி மொழி பேசும் மக்கள் ஒரே ராஜ்யத்தில் தமது மஹாராஷ்டிர சகோதரர்களுடன் தேசிய நலத்தையும், பம்பாய் நகரின் நலத்தையும் உளத்தில் கொண்டு சௌஜன்யமாக வாழ்வார்கள் என்று குஜராத் பிரதேச காங்கிரஸ் கமிட்டி உறுதியளித்துள்ளதை கமிஷன் பாராட்டுகிறது. இதன்மூலம் பம்பாய் சம்யுக்த மஹாராஷ்டிர ராஜ்யத்தில் ஒரு பகுதியானல் இப்படியே சௌஜன்யமாக குஜராத்தியர் வாழ முடியாது என்ற வாதத்திற்கு வளமிடுகிறது கமிஷன்.

ஒரு ராஜ்யத்தில் வாழ்ந்தால் மஹாராஷ்டிரர் ஜனத் தொகையில் 44 லிருந்து 48 சத விகிதம் அதிகரிப்பார்கள் என்றும், பம்பாய் ராஜ்யத்தில் உள்ள 402 லட்சம் மக்களில் [illegible]3 லட்சம் மஹாராஷ்டிரர்களாக இருப்பார்கள் என்றும் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் வகையில் குறிப்பிடுகிறது கமிஷன்.

### ஜனநாயக சக்திகள் ஆதரிக்கும்

இப்படி பலாபலப் பரீட்சை பாரதூரமான விளைவுகளுக்கு இடமளிப்பது. இரு பகுதிகளுக்கு மிடையில் நிரந்தரமான பகையும் மோதலும் உடலெடுக்க இடமளிப்பது. நகர மக்களைத் தத்தம் கட்சியில் சேர்க்க இருபகுதியினரிடை போட்டிப் பூசல்கள் எழ இடமளிப்பதாகும். இந்த சாபக் கேட்டை இன்னுஞ் சில ஆண்டுகளில் காணலாம்.

இத்தகைய நிலை இந்தியாவின் ஐக்கியத்திற்கு உயிரளிப்பதா? பந்தோபஸ்துக்கு உரமளிப்பதா? மஹாராஷ்டிர மக்களுக்கு மொழி வழி ராஜ்ய உரிமையை மறுப்பதற்குமட்டுமே இந்த ஐக்கியம் பந்தோபஸ்து வாதம் தோன்றியது போலும்!

இந்த நிலை நீடிக்க முடியாது. ஆந்திரர் கன்னடியர் மலையாளிகள் தமிழர் மூன்னுளில் மொழி வழி ராஜ்ய அமைப்பை மறுத்ததை எதிர்த்துப் போராடியது போலவே மகாராஷ்டிர மக்களும் குஜராத்தி மக்களும் போராடுவார்கள். பலம் பொருந்திய இயக்கத்தை நடத்துவார்கள். சம்யுக்த மகாராஷ்டிரம், மஹா குஜராத் என்று இரு மொழிவழி ராஜ்யங்களை அமைத்தே தீருவர்.

இந்த நியாயமான போராட்டத்திற்கு சகல மொழிவழி ராஜ்யங்களிலுமுள்ள ஜனநாயக சக்திகளின் அமோகமான ஆதரவு அவர்களுக்குக் கிடைக்கும் என்பது திண்ணம்.

# ஏ. ஐ. டி. யூ. சி.

# 35-வது ஆண்டு விழா

## பெருமை வாய்ந்த சரித்திரம்

**உலகத் தொழிலாளர்களே! ஒன்று சேருங்கள்! என்ற கோஷத்தைச் செயலாக்க 1945-ல் எழுந்தது உலகத் தொழிற்சங்க சம்மேளனம். இதை உருவாக்கும் பணியில் தலைசிறந்த தன் அனுபவத்துடன் முன்னணியில் நின்றது அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ்.**

**கட்சி வேற்றுமையின்றி காங்கிரஸ்வாதிகள், சோஷலிஸ்டுகள், கம்யூனிஸ்டுகள் தொழிற்சங்கவாதிகள் அனைவரும் பாடுபட்டு உழைத்தார்கள். இந்த ஸ்தாபனத்தைக் கட்டி வளர்த்ததிலும், இதன் கொடிக்கீழ் நிகழ்ந்த எண்ணற்ற போராட்டங்களிலும் இன்னுயிர் நீத்த இணையற்ற தியாகிகளுக்கு இந்த கட்டத்தில் அஞ்சலி செலுத்துகிறோம்.**



எஸ். ஏ. டாங்கே

இந்திய தொழிலாளி வர்க்கத்தின் அகில இந்திய மத்திய ஸ்தாபனமான அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸ் 31-10-1920ல் பம்பாய் நகரத்தில் நிறுவப்பட்டது. பம்பாய் நகரத்தில் நடந்த முதல் அகில இந்திய தொழிற் சங்க மகாநாட்டிற்கு தேசபக்த திலகம் லாலா லஜபதி ராய் தலைமை வகித்தார். இம்முதல் மகாநாட்டிற்கு 64 தொழிற் சங்கங்களில் இருந்து ஒரு லட்சத்து நாற்பதாயிரத்து எண்ணூற்று ஐம்பத்தினலு (1,40,854) அங்கத்தினர்களின் பிரதிநிதிகளாக 64 பேர்கள் வந்திருந்தனர். முதல் வருடமான 1920ம் ஆண்டிலேயே 64 தொழிற் சங்கங்கள் இணைக்கப்பட்டிருந்தது குறிப்பிடத் தக்கது.

இந்திய தொழிலாளர்களின்



வி. சக்கரை செட்டியார்

இந்த மத்திய ஸ்தாபனம் சர்வதேச தொழிலாளர் மகாநாட்டிற்கு (ஐ. எல். ஓ.) பிரதிநிதிகளை அனுப்பும் ஸ்தாபனமாக மிதவாத ஸ்தாபனமாக இருக்க வேண்டுமென்று பிரிட்டிஷ் சர்க்காரும், மிதவாதத் தலைவர்களும் விரும்பினர். ஆனல் முதல் காங்கிரஸின் தீர்மானங்களே இவர்களின் எண்ணத்திற்கு வேட்டுவைத்தன. இந்த முதல் மகாநாட்டில் நிறைவேற்றப் பட்ட தீர்மானங்கள் ஆவன:

### தீர்மானங்கள்

(1) தொழிற்சங்க நடவடிக்கைகளில் போலீஸ் தலையிடக்கூடாது; (2) தொழிலாளர் அவர்கள் நல உரிமைக்காக போராடுகையில் அவர்கள்மீது கிரிமினல் வழக்குகள் போடக்கூடாது; (3) தொழிலாளர்களுக்கு விபத்து ஏற்படும் பொழுது நஷ்டஈடு கொடுக்க வேண்டும்; (4) தொழிலாளர்களுக்கு வியாதிவந்து இருக்கும் போது, மருந்து உதவி, பண உதவி கொடுக்கவேண்டும், சிக்லீவு, மற்றும் லீவ் வசதிகள் அளிக்கப்பட வேண்டும்; (5) பிஜித் தீவில் இந்தியத் தொழிலாளர்கள் கொடுமையாக நடத்தப்படுவது கண்டிக்கப்பட்டது. இத் தொழிலாளர்கள் நல்ல முறையில் நடத்தப்படவேண்டும்; (6) சர்க்கார், முதலாளிகள், தொழிலாளர்கள் கூடிப்பேசும் ஐ. எல். ஓ. மகாநாட்டிற்கு தொழிலாளர் பிரதிநிதிகள் இம்மகாநாட்டில் தேர்ந்தெடுக்கப்பட்டனர்; (7) ஏ. ஐ. டி. யு. ஸி, தேர்ந்தெடுக்கும் பிரதிநிதிகளையே ஐ.எல்.ஓ.விற்கு அனுப்பவேண்டும் என்று சர்க்காருக்கு அறிவிக்கப்பட்டது.

1920 லிருந்து இன்றுவரை 24 மகாநாடுகள் நடைபெற்றுள்ளன.

நாட்டின் தலைசிறந்த தேசபக்தர்களும் தேசிய இயக்கத்தின் மகத்தான தலைவர்களுமான லாலா லஜபதிராய், தேசபந்து சித்தரஞ்சன் தாஸ் (லாகூர் 1923) ஜவர்ஹர்லால் நேரு (நாகபுரி, 1929) சுபாஷ்சந்திர போஸ் (கல்கத்தா 1931) முதலியோரும், சோஷலிஸ்ட் தலைவர்கள் தொழிற் சங்க வாதிகள் பலரும் இம்மகாநாடுகளில் தலைமை தாங்கியிருக்கிறார்கள் இந்த ஸ்தாபனத்தின் தேசபக்த பரம்பரையை இது உள்ளங்கை நெல்லிக் கனியாக எடுத்துக்காட்டப் போதும்.

### சென்னை மகாநாடு

1945-ல் சென்னையில் அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் மகாநாடு நடைபெற்றபொழுது ஏ. ஐ. டி. யு. ஸியில் இணைக்கப்பட்ட சங்கங்கள் 415. இந்த சங்கங்களில் ஸ்தாபன ரீதியாக திரண்டிருந்த அங்கத்தினர் தொகை ஐந்தரை லட்சம்.

இந்திய தொழிலாளி வர்க்கமும் இந்தியத் தொழிலாளி வர்க்கத்திற்கு தலைமைதாங்கிவரும் தாய் ஸ்தாபனமான ஏ. ஐ. டி. யு. சி. போராடிப் பெற்ற உரிமைகள்.

1. 8 மணி நேர வேலை.
2. ஞாயிறு விடுமுறை (ஓய்வு)
3. சாப்பாட்டிற்கு இடைவேளை.
4. குழந்தை உழைப்புத் தடை.
5. விபத்துக்கு நஷ்டஈடு.
6. பிரசவ சகாயமும் லீவும்,
7. சம்பளத்தோடு விடுமுறை.
8. குறித்த காலத்தில் சம்பளம்.
9. அபராதங்களின் எல்லை, சம்பாதித்த சம்பளத்தில் கொள்ளையடிப்பதற்கும் எல்லை.
10. பிராவிடண்டு பண்டு சட்டம்.
11. அரசாங்க இன்ஷூரன்ஸ் சட்டம்.
12. குறைந்தபட்ச சம்பள நிர்ணயம்.
13. விலைவாசி உயர்வுக்கேற்ற பஞ்சப்படி.
14. போனஸ் உரிமை.
15. தொழில் முடக்கத்தால் ஏற்படும் வேலை யில்லாமைக்கு நஷ்டஈடு.

### அடக்குமுறையை எதிர்த்து

ஏ. ஐ. டி. யு. ஸி, தோன்றிய நாளிலிருந்து இன்றுவரை கடந்த முப்பத்தைந்து ஆண்டுகளாக சர்க்

**கே. முருகேசன்**

காரும் முதலாளிகளும் தொழிலாளர்களை' உழைக்கும் மக்களை தாக்கிவந்ததை தொழிலாளிவர்க்கத்தை ஒன்று திரட்டி, தொழிலாளி வர்க்கத்திற்கு தலைமை தாங்கி முறியடித்திருக்கிறது. நூற்றுக்கணக்கான ஏ. ஐ. டி. யு. சி. சங்கங்களை காங்கிரஸ் ஆட்சியாளர் தடை செய்ததை உலகத் தொழிற்சங்க சம்மேளனத்தின் உதவியைப்பெற்று இந்த காங்கிரஸ் ஆட்சியாளர்களின் ஜன விரோத கொள்கைகளை தாக்குதல்களை முறியடித்து மீண்டும் ஏ. ஐ. டி, யு. சி. சங்கங்கள் இந்தியாவின் பல பாகங்களில் தொழிலாளர்களுக்கு திறம்பட வேலை செய்யப் பேருதவி புரிந்துள்ளது.

தொழிலாளர்களின், உழைக்கும் மக்களின் நல்வாழ்விற்காக அரும்பாடுபட்டு வருவது ஏ. ஐ. டி. யு. ஸி.

ஆயிரக்கணக்கான தொழிற்சங்க வாதிகளை காங்கிரஸ் ஆட்சியாளர்கள் சிறையில் தள்ளியிருந்த பொழுது டபிள்யூ. எப். டி. யு. விடமிருந்து ஏ, ஐ. டி. யு. சி. நிதி உதவி பெற்று எண்ணற்ற தொழிற்சங்க வாதிகளின் மீதிருந்த அபாண்டமான குற்றச்சாட்டுகளை ஏ. ஐ. டி. யு. சி. யின் சிறந்த வழக்கறிஞர்களைக்கொண்டு சுக்குநூருக்கி காங்கிரஸ் ஆட்சியாளர்களை அம்பலப்படுத்தி எண்ணற்ற தொழிற் சங்க வாதிகளை சிறையிலிருந்து மீட்டது குறிப்பிடத்தக்கது.

### ஒற்றுமை வேண்டும்

ஏ.ஐ.டி.யு.சி. ஸ்தாபனம் இந்திய தொழிலாளி வர்க்கத்தின் ஒற்றுமையை பலப்படுத்தி வந்ததைக் கண்டு நடுநடுங்கிய காங்கிரஸ் தலைமை இந்திய தொழிலாளி வர்க்கத்தை பிளவுபடுத்த முன் வந்தது.

1947ல் இந்திய தொழிலாளி வர்க்கத்தின் தாய் ஸ்தாபனமான ஏ.ஐ.டி.யு.சி.க்கு போட்டியாக ஐ.என்.டி.யு.சி.யை சர்தார் படேல் நிறுவினர்.

1948ல் சோஷலிஸ்ட்கள் இந்து மஸ்தூர் சபா என்ற மத்திய ஸ்தாபனத்தை நிறுவிக்கொண்டனர்.

1949ல் ஐக்கிய தொழிற்சங்க காங்கிரஸ் என்று மற்றொரு ஸ்தாபனம் ஏற்பட்டது.

ஏ.ஐ.டி.யு.சி.யிடமிருந்து இதற்கு முன் பிரிந்து சென்றவர் மீண்டும் ஏஐடியுசியில் வந்து சேர்ந்தனர். தொழிலாளி வர்க்கமும் பிளவுபட்டிருக்கக் கூடாது என்று நன்கு அறிந்தனர்.

அங்ஙனமே இன்று எச். எம். எஸ்.; ஐ.என்.டி.யு.சி. யு.டி.யு.சி, ஆகிய ஸ்தாபனங்களில் உள்ளோர் மீண்டும் இந்திய தொழிலாளி வர்க்கத்தின் தாய் ஸ்தாபனமான ஏஐடியுசியில் வந்து சேர்ந்து, இந்தியத் தொழிலாளி வர்க்கத்தின் ஒற்றுமையை நிலைநாட்டி தொழிலாளி வர்க்கம் சகல துறைகளிலும் முன்னேறும்படிச் செய்வார்களாக!

கடந்த 35 வருட காலமாக ஏ.ஐ.டி.யு.சி. ஜனநாயகத்திற்காகவும், சமாதானத்திற்காகவும், தொழிலாளர் நல்வாழ்விற்காகவும் அரும்பாடு பட்டிருப்பதை நன்கு உணர்வோமாக!

பல மத்திய ஸ்தாபனங்கள் இருப்பதை நன்கு பயன்படுத்திக் கொண்டு தைர்யமாக சர்க்காரும் முதலாளிக்கும்பல்களும் தொடர்ந்தாற்போல தொழிலாளி வர்க்கத்தின் சகல பகுதினர்மீதும் கடுமையான தாக்குதலை நடத்திக் கொண்டு வருகிறார்கள். சம்பள வெட்டை ராஷனலைசேஷனை புகுத்துகிறார்கள். தொழிற்சங்க இயக்கத்திலுள்ள முதலாளிக் கும்பலின் தாசர்கள் சம்பளவெட்டை ராஷனலைசேஷனை மானரோஷமின்றி ஏற்க முன்வரும் பச்சைத் துரோகத்தைப் பார்க்கிறோம்.

இன்று நாடெங்கும் வேலையில்லாத் திண்டாட்டம் தலைவிரித்தாடுகிறது. தாங்கமுடியாத வேலைப் பளு தொழிலாளர்மீது சுமத்தப்படுகிறது. சம்பள வெட்டும் வாழ்க்கைத்தரத்தில் தாக்குதலும் விழுகின்றன.

பிற்போக்கு சக்திகளின் தாக்குதல்களை முறியடிக்க தொழிலாளி வர்க்க ஒற்றுமை மிக இன்றியமையாதது! அந்தந்த தொழிலுக்குரிய சங்கத்தில் தொழிலாளர் அனைவரும் அங்கத்தினராகச் சேரவேண்டும். ஒற்றுமையைக் கட்டி உறுதிப்படுத்தவேண்டும். அன்றாட தொழிற்சங்க நடவடிக்கைகளை ஜனநாயக பூர்வமாக திறம்பட நடத்திவரவேண்டும். பாக்டரிகளில் தொழிலாளர் மத்தியில் எப் பிற்போக்கு சக்தியாலும் அசைக்கமுடியாத ஒற்றுமையை உறுதியாகக் கட்டிவிடவேண்டும். முதலாளிக் கும்பல் சர்க்கார் தொழிலாளி வர்க்கத்தின்மீது எந்த ரூபத்தில் தாக்குதலை நடத்தினலும் கட்டுப்பாடாக வீரதீரமாக எதிர்த்து முறியடிக்கவேண்டும்.

நம் நாட்டின் பல பாகங்களில்

(8-ம் பக்கம் பார்க்க)

# [illegible] சுதந்திரமும் [illegible]ன்னனியும்

புத்துவ சக்திகளைப் பொறுத்த வரையில் இது இன்னும் மோசம். ஆதலால், சீன முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சியின் இரண்டு அடிப்படையான பிரச்னைகளில் அல்லது இரண்டு அடிப்படையான கடமைகளில் ஒன்றைக்கூட சீன தேசீய முதலாளிகளால் தீர்க்கமுடியாது அல்லது அடையமுடியாது.

(செலக்டட் ஒர்க்ஸ், வால்யூம் 3, பக்கம் 117 அழுத்திக் கூறியது நான்)

### மேலும் மேலும் சுதந்திரக் கொள்கை

எனினும், முதலாளித்துவ ஜனநாயகப் 'புரட்சி பூர்த்திசெய்யப் படுவதை, ஒரு தேசம் சுதந்திர அரசியல் அந்தஸ்து அடைவதுடன் சமப்படுத்திச் சொல்லக் கூடாது.

1947ல், இந்தியா பெயரளவுக்கு சுதந்திர தேசம் என்ற அந்தஸ்தை அடைந்தது. அதற்குப் பின்னல் முக்கியமான பல அபிவிருத்திகள் ஏற்பட்டிருக்கின்றன. சீனவில் மக்கள் புரட்சியின் வெற்றி, ஆசிய விடுதலை இயக்கங்களின் சக்திமிக்க வளர்ச்சி, சோஷலிஸ முகாமும், சோஷலிஸ உலக மார்க்கெட்டும் பிரம்மாண்டமாக பலமடைந்தது, ஏகாதிபத்தியம் பலவீனமடைதல், அதனுடைய அரசியல் ராணுவப் பெருந்தோல்விகள், இந்தியாவிற்குள் ஜனநாயக இயக்கத்தின் வளர்ச்சி முதலிய அபிவிருத்திகள் ஏற்பட்டிருக்கின்றன. இந்த அம்சங்களினல் உதயமளிக்கப்பட்ட இந்திய சர்க்கார் தன்னுடைய அரசுரிமையை மென்மேலும் அதிகமாக அழுத்தி வலியுறுத்துவது சாத்தியமாகியுள்ளது; இதர அரசாங்கங்களைப் பொறுத்த வரையில், மேன்மேலும் அதிகமான சுதந்திரக் கொள்கையைக் கடைப்பிடிப்பது சாத்தியமாகிறது. நடைமுறை விஷயங்களுக்காக, இந்தியா ஒரு சுதந்திர நாடு என்று கருதப்பட வேண்டிய கட்டத்தை இந்த வளர்ச்சிப் போக்கு அடைந்திருக்கிறது.



அஜய் கோஷ்

### முதலாளிகளால் முடியுமா?

எனினும், நம்முடைய பொருளாதார வாழ்க்கையின் மீதுள்ள பிரிட்டிஷ் மூலதனப் பிடிப்பின் நேரடி விளைவாகவும், நிலப் பிரபுத்துவ மிச்சசொச்சங்கள் தொடர்ந்து நீடிப்பதன் நேரடி விளைவாகவும் இந்தியப் பொருளாதாரம் சார்பு, அரைக்காலனி தன்மை கொண்டிருப்பதால், இந்தியாவின் இந்த அரசியல் சுதந்திரம் ஸ்திரமில்லாத அஸ்திவாரத்தின்மீது அமைந்துள்ளது. பிரிட்டிஷ் மூலதனத்தைப் பறிமுதல் செய்வதன்மூலம் ஏகாதிபத்தியத்துடன் பரிபூரணமாக முறித்துக் கொள்வதாலும், நிலப் பிரபுத்துவத்தை அழித்து ஒழிப்பதாலும் மாத்திரமே, தேசிய சுதந்திரத்தை உறுதியான அடிப்படையின் மீது வைக்க முடியும்; அதற்கிருக்கும் ஏகாதிபத்திய பயமுறுத்தலை அகற்ற முடியும்; அதேபோல, சகல துறைகளிலும் முன்னேறுவதற்கான சூழ்நிலைமைகளை சிருஷ்டிக்க முடியும். இந்தக் கடமைகளை முதலாளிகளால் நிறைவேற்ற முடியாது.

இது சம்பந்தமாக, முதல் உலக யுத்த இறுதியில் துருக்கியிருந்த நிலைமையைப் பரிசீலிப்போம்.

ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நடைபெற்ற போராட்டம், அங்கே 'குறைக்கப்பட்ட ஏகாதிபத்திய எதிர்ப்புப் புரட்சியாக' (ஸ்டாலின்) முடிவடைந்தது. நிலப் பிரபுத்துவ எதிர்ப்புப் புரட்சி பூர்த்தி செய்யப்படவில்லை; அரைக் காலனியின் பொருளாதார அம்சங்கள் துருக்கியில் எஞ்சி இருந்தன. அதே சமயத்தில், யுத்தத்திற்குப் பின்னல் ஏகாதிபத்திய நாடுகளின் பலவீனத்தையும், அவைகளுக்கிடையில் குறிப்பாக பிரிட்டனுக்கும், பிரான்சுக்குமிடையில் ஏற்பட்ட பரஸ்பர மோதல்களையும் தனக்கு அனுகூலமாக்கிக் கொள்வதன்மூலமும், சோவியத் யூனியனுடன் நேச உறவுகளை ஏற்படுத்திக் கொள்வதன்மூலமும், சர்வதேச விவகாரங்களில் ஒரு சுதந்திர அந்தஸ்தை துருக்கி அடைந்தது; ஒரு சுதந்திர நாடாக அது இயங்கியது; ஜப்பானைத் தவிர ஆசியா ஆப்ரிக்காவிலுள்ள வேறு எந்த நாட்டைக்காட்டிலும் அதிக சுதந்திரமாக இருந்தது. ஆனல், துருக்கியின் பொருளாதார நிலைமையின் காரணமாகவும், அதன் ஆளும் வர்க்கத்தின் தன்மையின் காரணமாகவும், துருக்கியின் சுதந்திரத்தின் அஸ்திவாரம் பூராவும் பலஹீனமாக இருந்தது. துருக்கியின் நிலைமை எவ்வளவு தூரத்திற்கு இன்று இழிந்துவிட்டது என்பது அனைவருக்கும் தெரிந்ததே. அரசியல் ரீதியில் ஒரு சுதந்திர நாடு என்றுகூட அதைக் கருத முடியாது.

### உறுதியான அஸ்திவாரம் எப்போ?

முடிவாகக் கூறுமிடத்து: தேசவிடுதலை இயக்கத்தின் வளர்ச்சியினலும்; ஏகாதிபத்தியத்தின் பொது நெருக்கடியினலும், அதன் மிகுந்த பலவீனத்தினலும், சோஷலிஸ முகாம் பிரம்மாண்டமாக பலப்பட்டிருப்பதாலும் அரசியல் சுதந்திரத்தை அடைவது ஒரு தேசத்திற்கு சாத்தியமே. ஆனல், முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சி முற்றுப் பெருத வரையில், இந்த சுதந்திரத்திற்கே உறுதியான அஸ்திவாரம் அமையாது; கட்டுப்பாடுகளுக்கும், பயமுறுத்தல்களுக்கும் இது உள்ளாக நேரிடும். தொழிலாள வர்க்கத் தலைமையின்கீழ் மாத்திரமே இந்தக் கடமையை நிறைவேற்ற முடியும்.

# ராஜ்ய புனரமைப்பு கமிஷன் முடிவு

## பலவிடங்களில் கொந்தளிப்பு

### கண்டன ஆர்ப்பாட்டங்கள்

**ராஜ்யப் புனரமைப்புக் கமிஷன் அறிக்கையின் நல்ல அம்சங்களை நாடு பூராவிலுமுள்ள மக்கள் பொதுவாக வரவேற்றபோதிலும், தங்களுக்கு நியாயம் வழங்கப்படாதது கண்டு பல ராஜ்ய மக்கள் கொதிப்பும் கோபமும் அடைந்துள்ளார்கள்.**

தென் இந்தியாவைப் பொறுத்த வரையில் ஏறக்குறைய மொழிவழி ராஜ்யங்கள் அமையும்படி கமிஷன் சிபார்சு செய்துள்ளது. திரு-கொச்சியிலுள்ள ஐந்து தமிழ் தாலுக்காக்கள் தமிழ் நாட்டுடன் சேர்க்கப்பட்டுள்ளன. ஐக்கிய தமிழகத்திற்காக இடையறாது தமிழ் மக்கள் நடத்திவந்த போராட்டத்தின் மகத்தான வெற்றியாகும் இது.

தென்னாட்டில் புதிய கேரள ராஜ்யம் உதயமாகிறது. ஐக்கிய கேரளத்திற்காகப் பாடுபட்டுவந்த மலையாள மக்கள் மிகவும் குதூகலமடைந்திருக்கிறார்கள். ஆனால் ஐக்கிய கேரள இயக்கத்தில் பிரதானமாகப் பங்கெடுத்துவந்த கே. பி. கேசவமேனன் போன்ற தேசியவாதிகள் கமிஷன் அறிக்கையைப் பொதுவாக வரவேற்றபோதிலும், ஏமாற்றத்தையும் தெரிவித்துள்ளார்கள். ஐந்து தமிழ் தாலுக்காக்கள் தமிழகத்துடன் சேர்க்கப்படுவதை அவர்கள் எதிர்த்திருக்கிறார்கள்.

#### கேரளத்தில்

கம்யூனிஸ்ட் கட்சியும், இதர ஜனநாயக ஸ்தாபனங்களும் கேரளாவைப் பொறுத்தவரையில் கமிஷன் அறிக்கையை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டிருக்கின்றன. நாட்டின் ஒருசில இதர இடங்களில் மொழிவழி ராஜ்யங்கள் அமைவதற்குக் கமிஷன் சிபார்சு செய்யவில்லையென்றாலும், தென்னாட்டில் இத்தகைய ராஜ்யங்கள் ஏற்படுவதற்கு வழிவகை செய்திருப்பது கண்டு பேருவகை கொள்கின்றன. எல்லைப் பிரச்னைகளை சுமுகமாக தீர்த்துக்கொள்ளமுடியும் என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் திரு-கொச்சி கமிட்டி திடமாக நம்புகிறது.

கேரளா சோஷலிஸ்ட் கட்சித் தலைவர்மத்தாய் மஞ்சூரான் கேரள ராஜ்ய அமைப்பை வரவேற்றுவிட்டு நீலகிரிஜில்லாவின் கூடலூர் தாலுக்காவையும் கேரள ராஜ்யத்தில் சேர்க்கவேண்டும் என்று கோரியிருக்கிறார். மாகாணக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் கமிஷன் அறிக்கை நியாயமானதென்றும், அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் கூறியுள்ளார்.

ராஜவிசுவாசிகளான சில பிற்போக்கு நாயர் கோஷ்டிகள் தமிழ் தாலுக்காக்கள் தமிழகத்துடன் சேர்க்கப்படுவதை வன்மையாக எதிர்க்கிறார்கள். 'கன்யாகுமரி, சுசீந்திரம், பத்மநாபபுரம் முதலியவை இல்லாமல் கேரள ராஜ்யத்தை மனதாலும் எண்ணமுடியாது' என்று இவர்கள் பொருமுகிறார்கள். ராஜப்பிரமுகர் பதவி ரத்துசெய்யப்படுவது கண்டு இவர்களுக்கு அடக்கமுடியாத பெருங்கோபம். 'மஹாராஜாவிற்குத் துரோகம் இழைக்கப்பட்டது' என்று கூச்சலிடுகிறார்கள்.

தமிழ் தாலுக்காக்கள் இல்லாமல் அமையும் கேரள ராஜ்ய சட்டசபையில் கம்யூனிஸ்ட்களால் தலைமை தாங்கப்படும் ஜனநாயக சக்திகள் மெஜாரிட்டியாக இருக்குமே என்று பிற்போக்காளர் அஞ்சுகிறார்கள். இதுவரை கமிஷன் அறிக்கையைப் பற்றி விமர்சனம் செய்த **கேரள கௌமுதி, மலையாள மனோரமா, தேசபந்து** முதலிய ஒரு சில காங்கிரஸ் பத்திரிகைகளும் தமிழ் தாலுக்காக்கள் பிரிக்கப்படுவதை எதிர்த்துள்ளன.

கேரளா ராஜ்யத்தை மலபார் மக்களும் மிகுந்த சந்தோஷமுடன் வரவேற்றுள்ளார்கள். முஸ்லிம் லீக் பத்திரிகையான **சந்திரிகா,** பிரபல தேசிய தினசரியான **மாத்ரு பூமியும்** இதை வரவேற்றுள்ளன. தக்ஷிண ராஜ்யம் வேண்டும் என்று கோரி வந்த மலையாளப் பிரதேசக் காங்கிரஸ் தலைமைக்கும், இதை ஆதரித்து வந்த பிரஜா சோஷலிஸ்ட்களுக்கும் கமிஷன் அறிக்கை பேரிடியாக வந்துள்ளது.

ஐக்கிய கேரளம் அமைக்கப்படுவதை ஆதரித்துக் கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் தாமோதரன் மகிழ்ச்சியுடன் அறிக்கை விடுத்துள்ளார். பிரபல காங்கிரஸ் தலைவர் உம்மர் கோயா எம். எல். சி. விடுத்த அறிக்கையில் தட்சிண ராஜ்யத்தைக் கேட்பதில் அர்த்தமில்லை யென்றும், கமிஷன் அறிக்கையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் குறிப்பிட்டுள்ளார் மலையாளக் காங்கிரஸ் காரியதரிசி குட்டிக் கிருஷ்ணநாயர் தவிர அனேகமாக எல்லா காங்கிரஸ் பிரமுகர்களும் அறிக்கையை வரவேற்றுள்ளார்கள்.

ஐக்கிய கேரளத்திற்காக 1921 லிருந்தே போராடி வந்த மலையாள மக்களின் கோரிக்கை மகோன்னத வெற்றி பெற்றுவிட்டது.

#### மஹாராஷ்டிரத்தில்

மலையாள மக்களுக்கு நீதிவழங்கிய கமிஷன் மகாராஷ்டிர மக்களுக்கு அநீதி இழைத்திருக்கிறது. சம்யுக்த மஹாராஷ்டிரமும், மஹா குஜராத்தும் ஏற்படுவதற்கு சிபார்சுகள் செய்யாமல், இரண்டு மொழிகள் பேசும் ஒரே ராஜ்யத்தை கமிஷன் சிருஷ்டித்திருக்கிறது. எஸ். கே. பாடில், பி. ஜி. கேர் தவிர சகல மஹா ராஷ்டிரத் தலைவர்களும் இந்த இரட்டை மொழி ராஜ்யத்தை மிகக் கடுமையாக எதிர்க்கிறார்கள்.

கமிஷன் அறிக்கையைக் கண்டித்து பம்பாய் கார்ப்பரேஷன் கூட்டத்தில் கம்யூனிஸ்ட் உறுப்பினர் டாக்டர் மோரே 11-10-55-ல் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். உடனே ஏக அமளி துமளி ஏற்பட்டு கூட்டம் ஒத்தி வைக்க வேண்டியதாயிற்று. அதே நாள் மாலையில் சம்யுக்த மஹாராஷ்டிரம் கோரி, கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவில் பிரம்மாண்டமான பொதுக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திலிருந்து திரும்பிவந்த பொதுமக்கள்மீது, பம்பாய் போலீஸ் தடியடிப் பிரயோகம் செய்து மில் மஜ்தூர் யூனியன் தலைவரான பாபுராவ் ஜக்தாப்பையும் கைது செய்தது.

அறிக்கையைக் கண்டித்து மஹா ராஷ்டிரம் திரண்டு எழுகிறது கோல்ஹாப்பூரில் 20,000 பேர் கொண்ட கண்டனக் கூட்டம். நாசிக்கில் பரிபூரணமாக மாணவர்கள் ஹர்த்தால். சம்யுக்த மஹாராஷ்டிரத்திற்காகத் தொடர்ந்து போராடுவதென சம்யுக்த மஹாராஷ்டிரப் பரீஷத் முடிவு செய்துள்ளது. இதில் சோஷலிஸ்டுகளும், கம்யூனிஸ்ட்டுகளும் ஒன்றுபட்டுள்ளார்கள். சம்யுக்த மஹாராஷ்டிரத்திற்காக அமைதியுடன் தொடர்ந்து பாடுபடவேண்டுமென முன்னாள் காங்கிரஸ் பொதுக்காரியதரிசி சங்கரராவ் தேவ் அறிக்கை விடுத்துள்ளார்.

பம்பாய் மந்திரிசபையில் இருக்கும் மஹாராஷ்டிர மந்திரிகள் அனைவரும் அறிக்கையை எதிர்க்கிறார்களாம். சட்டசபையில் அறிக்கையைப் பற்றி விவாதித்த பின்னர் மஹாராஷ்டிர மந்திரிகளும், மஹாராஷ்டிர காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்களும் தத்தம் பதவிகளை ராஜினமா செய்து விடுவார்கள் என்றும் வதந்தி உலவுகிறது.

மராட்டி மொழி ராஜ்யமாகப் புதிதாக அமைக்கப்படும் விதர்ப்ப பிரதேசத்திலும் அதிருப்தி வளருகிறது. மஹாராஷ்டிரத்தில் விதர்ப்பாவையும் சேர்த்து சம்யுக்த மஹாராஷ்டிரம் அமைக்க வேண்டுமென்று மத்தியப் பிரதேஷ் கம்யூனிஸ்ட் கமிட்டிக் காரியதரிசி அறிக்கை விடுத்துள்ளார்.

#### பிற பகுதிகளில்

மஹா குஜராத் ராஜ்யம் ஏற்படவில்லையே என்ற ஏமாற்றம் குஜராத் பூராவிலும், சௌராஷ்டிராவிலும் ஏற்பட்டிருக்கிறது. காங்கிரசுக்கு சாதகமான **சந்தேஷ்** எனும் தினசரியும், **பிரபாத்** என்ற சுயேச்சையான தினசரியும் மஹா குஜராத் வேண்டுமென்று கமிஷனிடம் காங்கிரஸ் கோராததைக் கண்டித்துள்ளன. மஹா குஜராத் கிடைக்காததுபற்றி இதுவரை காங்கிரஸ் தலைவர்கள் மௌனம் சாதிக்கிறார்கள்.

மஹா குஜராத் அமைக்கப்படாததைக் கண்டித்து குஜராத் கம்யூனிஸ்ட் கமிட்டிக் காரியதரிசி தோழர் தினகர் மேத்தா அறிக்கை விடுத்துள்ளார். பம்பாயைத் தம் வசம் வைத்துக்கொள்ளவேண்டுமென விரும்பிய சில சுயநலமிகளான பெரு முதலாளிகள் தங்களுடைய நலன்களுக்காக மஹா குஜராத்தைத் தியாகம் செய்துவிட்டார்கள் என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார். மஹா குஜராத் கோரிக்கைக்காக சகல கட்சிகளும் ஒன்றுபட்டு பிரம்மாண்டமான ஐக்கிய இயக்கத்தைக் கட்டி வளர்க்க வேண்டுமென்றும் அறைகூவல் விடுத்துள்ளார்.

விசாலாந்திரா ஏற்படாததைக் கண்டித்து தெலுங்கு கம்யூனிஸ்ட் தினசரியான **விசாலாந்திரா** தலையங்கம் தீட்டியுள்ளது. இரண்டு தெலுங்கு ராஜ்யங்கள் ஏற்படுவதற்கு கமிஷன் சிபார்சு செய்திருப்பதை விமர்சித்துவிட்டு, இதற்கு எத்தகைய கோட்பாடும் இல்லையென்று அது குறிப்பிட்டிருக்கிறது. விசாலாந்திரா அமையும்வரையிலும் தெலுங்கு மக்கள் ஓய்ந்திருக்கமாட்டார்கள் என்றும் அது எச்சரித்துள்ளது.

திரிபுராவை அஸ்ஸாமுடன் இணைக்கவேண்டுமென்று கமிஷன் சிபார்சு செய்திருப்பதைக் கண்டித்து அகர்த்தலாவில் 11 – 10 – 55-ல் பரிபூர்ணமாகப் பொதுவேலை நிறுத்தம் நடைபெற்றது. மாணவர்கள் கூட பரீட்

(8-ம் பக்கம் பார்க்க)



## புத்தக விமர்சனம்

### தேச புனர்நிர்மாண வேலைகளும் கம்யூனிஸ்ட் கட்சியும்

[கிடைக்குமிடம்: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 199, மவுண்ட் ரோடு, சென்னை. விலை: அணா 8]

பஞ்சாயத்து போர்டு தேர்தலிலிருந்து பாராளு மன்றத் தேர்தல் வரையிலும் ஐந்தாண்டுத் திட்டம் தான் ஆளும் கட்சியினருக்குப் பிரசார மேடையாக, தாரகமந்திரமாக இருக்கிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் மகத்தான சாதனைகள் சாதித்துவிட்டோம், இரண்டாவது திட்டத்தில் அதைவிட மகத்தான சாதனைகள் சாதிக்கப்போகிறோம். எனவே காங்கிரஸ் கட்சிக்கே வாக்களியுங்கள் எனப் பேசுகின்றன.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் காரணமாக உற்பத்தி 38 சதவிகிதம் உயர்ந்துவிட்டது என்றும் இதைவிட அதிகமாக இரண்டாவது திட்டத்தில் உற்பத்தியை பெருக்கி செல்வவளம் நிறைந்த நாடாக மாற்றப்போகிறோம் என்றும் பறைசாற்றுகிறார்கள்.

உண்மை என்ன? 38 சதவிகிதம் உற்பத்தி உயர்ந்த விதம் என்ன? அந்த உயர்வினால் நன்மை அடைந்தவர்கள் யார்? மக்கள் வாழ்க்கை எந்த அளவு உயர்ந்தது அல்லது வீழ்ந்தது? தங்கள் சாதனைபற்றி காங்கிரஸ் தலைவர்கள் உண்மையில் பெருமைப்பட்டுக்கொள்ள அருகதையுள்ளவர்களா?

இரண்டாவது திட்டம் என்கிறார்களே! ஆரம்பத்தில் போட்ட திட்டமென்ன? அதை ஏற்று நிறைவேற்ற வழி வகுக்காமல் ஏன், கழுதைதேய்ந்து கட்டெறும்பான கதையாக நகல் திட்டத்தைக் குறைத்துக்கொண்டு வருகிறார்கள்.

இன்று உண்மையில் நம் நாடு முன்னேற சரியான திட்டம் போடுவதாக இருந்தால் எந்தத் துறைகளை எந்த அளவு பிரதானப்படுத்த வேண்டும்; இன்று சீரழிந்த நிலைமை என்ன? அதைச் செப்பனிடும் மார்க்கம் என்ன? என்பதைப்பற்றியெல்லாம் ஆதியோடந்தமாக ஆராய்ந்து இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி நம்நாட்டு மக்களுக்கு ஓர் விளக்கம் தந்துள்ளது.

அதுதான் இந்த நூல். நாடு விருத்தி அடைய வேண்டுமென்று விரும்பினால்மட்டும் போதாது, அது எவ்விதத்தில் எந்தக் குறிக்கோளுடன் முன்னேற வேண்டுமென்ற புத்திபூர்வமான தெளிவு வேண்டும். தேசிய முன்னேற்றத்தில் ஆர்வங்கொண்ட ஒவ்வொருவருக்கும் இவ்விதத் தெளிவு இல்லாவிட்டால் ஒன்று கோயங்காவின் ஏடுகள் போன்ற பெரு முதலாளிகளின் பொய்ப் பிரசாரத்திற்கு இலக்காவார்கள்; அல்லது கண்ணைக்கட்டி காட்டில் விடப்பட்டவர்கள் போல கண்ணிழந்து தவிப்பார்கள்.

தேசப் புனர்நிர்மாணப் பிரச்னைகளும் கம்யூனிஸ்ட் கட்சியும் என்ற இந்த நூல் ஒவ்வொரு கம்யூனிஸ்டுக்கு மட்டுமல்ல, தேசியப் பொருளாதார முன்னேற்றத்தில் அக்கறை கொண்டுள்ள அனைவருக்கும் ஒளிமிகுந்த தெளிவூட்டும் கலங்கரை விளக்குப் போன்று உள்ளது என்பதை நீங்கள் படித்துப் பார்த்தபின் ஒப்புக்கொள்வீர்கள்.

—கே. எம்.

★

## பஞ்சசீலத்தின் சாதனைகள்

**விலை 3 அணா**
**ஜனசக்தி பிரசுராலயம்**
**சென்னை – 14.**

பஞ்சசீலம்! இன்று உலகம் பூராவுமே அங்கீகரிக்கும் சூழ்நிலை அதிகரித்து வருகிறது. ஆசிய மக்களின் கலங்கரை விளக்காகத் திகழும் கோட்பாடு இது. யாரால், பஞ்சசீலம் எவ்விதம் உலகில் பிரகடனப்படுத்தப்பட்டது, அதன் முழு வடிவமென்ன என்பதை இந்நூலிலிருந்து தெரிந்துகொள்ளலாம். பிறருக்கு வழிகாட்டியாக இந்திய – சீன பிரதமர்களிடையே பஞ்சசீல ஒப்பந்தம் முதன் முதலில் ஏற்பட்டது. இதையே சோவியத் பிரதமரும் இந்தியப் பிரதமரும் ஊர்ஜிதம் செய்து அறிக்கை விட்டனர். ஆசிய ஆப்பிரிக்க நாடுகளுக்கு இதே கோட்பாடுகள் தான் இன்று வழிகாட்டியாக உள்ளன.

இதன் பிரம்மாண்டமான சக்தியை உலகம் கண்டது. முன் கண்டிராத புதுமைகளைக் காண முடிந்தது. இந்த இரு அறிக்கைகளின் சரித்திர முக்கியத்துவத்தை உணர்ந்து அவைகள் பூரணமாக வெளியிடப் பட்டுள்ளன. இவற்றின் முக்கியத்துவத்தை விளக்கி திரு.எஸ். ராமகிருஷ்ணன் அணிந்துரை வரைந்திருக்கிறார்.

உலக சமாதான இயக்கத்திற்கு திரும்பு முனையாக விளங்கிய இக் கோட்பாடுகளை சகலரும் புரிந்து கொள்ள பேருதவி புரிகிறது இச் சிறு நூல்.

—ர.

## வரப்பெற்றோம்

### டாஸ் நூல்கள்

இந்தியாவிலுள்ள டாஸ் பிரதிநிதியால் வெளியிடப்பட்ட கீழ்க் கண்ட நூல்கள் வரப்பெற்றோம்:

★ **சர்வதேச நிலைமையும் சோவியத் அரசாங்கத்தின் வெளிநாட்டுக் கொள்கையும்.** —மாலடோவ் அறிக்கை. பக்கம் 68. விலை 2 அணா

★ **சோவியத் யூனியன் சமாதானத்துக்காகப் போராடுவது ஏன்?**
—ஆசிரியர்: இ. டார்லே. விலை 2 அணா

★ In the world of Soviet Science. —*by Pisarzhevsky* As. 4

★ 37th Anniversary of October Revolution.

★ Moscow University. As. 4

★ Higher Education in U.S.S.R. As. 3

★ Construction Jobs on Soviet Rivers.

#### நாம்

திரு. கு. சேதுராமனை ஆசிரியரகக்கொண்டு 'நாம்' என்ற வாரப் பத்திரிகை வரப்பெற்றோம் 12 பக்கங்கள். விலை இரண்டணா
விலாசம்: 'நாம்', சென்னை-21.

#### மலர்

திரு.வே. கபிலனை ஆசிரியராகக் கொண்டு மாத இதழாக, "மலர்" வெளி வருகிறது. விலை 4 அணா. விலாசம்: 5, ஆண்டியப்ப கிராமணி தெரு, ராயபுரம், சென்னை.

## தூத்துக்குடி ஹார்வி

தூத்துக்குடி ஹார்வி மில்லில் யுத்த காலத்தில் 4500 பேர் 10 மணிநேரத்தில் செய்த உற்பத்தி அளவை, அதே 4500 பேர்களைக் கொண்டு 8 மணி நேரத்தில் செய்து முடிக்கவேண்டுமென்று ஹார்வி நிர்வாகம் திட்டம் போட்டிருக்கிறது. அதாவது 6000 பேர் வேலையை 4500 பேர்களைக் கொண்டு செய்விக்க திட்டமிடுமிறது. இதனுல் 1500 தொழிலாளர்களுக்கு மேற்கொண்டு வேலை கிடைப்பதைத் தடைசெய்கிறது.

மதுரை, சிங்கை, தூத்துக்குடி ஆகிய ஹார்வி மில்களில், எல்லா பிரேம்களும் 1946 முதல் அமுலிலுள்ள வேலைப்பளு அடிப்படையில் ஓட்டப்பட்டால், மேற்கொண்டு 5000 பேர்களுக்குப் புதிதாக வேலை கொடுக்கலாம் என்கிருர்கள் தொழிலாளர்கள்.

# தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர் சம்மேளனம் உதயமாகிவிட்டது

## கோரிக்கைப் பட்டியல்

சென்னை மாகாண மின்சாரத் தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கூட்டம் 9-10-55-ல் சென்னையில் பாரிஸ்டர் திரு. வி. ஜி. ராவ் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் சென்னை, மதுரை, சேலம், பைக்காரா முதலிய இடங்களிலிருந்து பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். பாபநாசம், பெரியாறு முதலிய இடங்களிலிருந்து வாழ்த்துச் செய்திகள் வந்தன.

விவாதத்தில் தோழர்கள் டி. ஆர். கணேசன், கே. டி. கே., எஸ். சி. கிருஷ்ணன், சென்னை எம். ஈ. எஸ்.-ஐச் சேர்ந்த ராஜகோபால், மோகனரங்கம், நரசிம்மன், சேலம் கல்யாணசுந்தரம், மதுரை அலங்காரம், பைக்காரா பாலகிருஷ்ணன், பாபநாசம் ராமசாமி முதலியோர் பங்கெடுத்துக் கொண்டனர்.

சென்னை ராஜ்ய மின்சார ஊழியர் சம்மேளனம் அமைக்கப்பட்டு, அதன் சட்டதிட்டங்களும் அங்கீகரிக்கப்பட்டன.

வி. ஜி. ராவ் தலைவர், டி. ஆர். கணேசன், ஜி. சாமுவேல், உப-தலைவர்கள், எஸ். சி. கிருஷ்ணன் பொதுச்செயலாளர், சேலம் கல்யாணசுந்தரம், மதுரை அலங்காரம், பைக்காரா பாலகிருஷ்ணன் முதலியோர் உதவிக் காரியதரிசிகள்.

நிர்வாகக் கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது. உப தலைவர்களாக மற்றுமிருவரும், நிர்வாகக் கமிட்டியில் மேலும் பலரும் சேர்த்துக்கொள்ளப் படுவார்கள்.

கோரிக்கைப் பட்டியலும் வகுக்கப்பட்டது.

### தீர்மானங்கள்

1. அடிப்படைச் சம்பளம் ரூ. 35, பஞ்சப்படி ரூ. 45, ரிஸ்க் அலவன்ஸ் ரூ. 20 ஆக மொத்தம் ரூ. 100 தரவேண்டும.

2. 6 மாத சர்வீஸ்காரர்களை நிரந்தரமாக்கி, கிரேடு பிரிக்க வேண்டும்.

3. உடனடியாக 25 சதமான சம்பள உயர்வு.

4. கண்ட்ராக்ட் முறை ஒழிக்கப்பட வேண்டும். அதுவரை மற்றவர்களுக்கு அளிக்கப்பட்டுவரும் சலுகைகளைக் கொடுக்கவேண்டும்.

5. ரிட்டயர் ஆகும் வயது 60 ஆக உயர்த்தப்பட வேண்டும்.

6. ஓ. எஸ். எஸ்.க்குக் கிடைக்கும் அளவு என். எம். ஆர். தொழிலாளர்களுக்கும் லீவு வசதி கிடைக்கவேண்டும்.

7. ரிட்டயர் ஆகிறவர்களுக்குப் பென்ஷன் அல்லது கிராஜுடி கொடுக்கப்பட வேண்டும்.

8. சீனியாரிடி பிரகாரம் புரமோஷன், எலெக்ட்ரீஷியன்களுக்கு யூனிபாரம், நைட் அலவன்ஸ், டஸ்ட் அலவன்ஸ் முதலியன வேண்டும்.

9. மதுரை, சிங்காரா ஆகிய இடங்களில் தொழிற்சங்க ஊழியர் பழிவாங்கப்பட்டிருப்பதைக் கண்டித்தும், அவர்கள் மீதுள்ள கேஸ்களை வாபஸ் வாங்கி, மீண்டும் வேலைக்கு வைத்துக்கொள்ள வேண்டுமெனவும், மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப் பட்டன.

தீர்மானங்களை விளக்கி 11-10-55ல் மவுண்ட்ரோடு மகாஜனசபா மண்டபத்தில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் டி.ஆர். கணேசன், கே. டி. கே., எஸ்.சி. கிருஷ்ணன், அலங்காரம், பாலகிருஷ்ணன் முதலியோர் பேசினுர்கள்.

## தங்கச்சி மடம் மீன்பிடிப்போர் கோரிக்கை

ராமேஸ்வரத்தையடுத்த தங்கச்சி மடம் மீன் பிடித் தொழிலாளர் சங்க துவக்க விழாவுக்கு 8-10-55ல் தலைமை வகித்த திரு. செங்கோல் கோமஸ் அவர்களும், திரு. ஆர். நம்பிராயணன், இராமேஸ்வரம் பஞ்சாயத் போர்டு தலைவர் திரு. கோடூர் ராஜகோபால சாஸ்திரி, திரு. வி. எம். ஆறுமுகம் ஆகியோரும் தொழிலாளர் குறைகளைப் பற்றி விளக்கமாகப் பேசினுர்கள்.

### தீர்மானங்கள்.

4000 பேர்கொண்ட இச்சமூகத்தாருக்கு ஓட்டுரிமை வேண்டுமென்றும், தேவையான வலை நூல் வாங்கிக்கொள்ள நூல் பெர்மிட் சங்கத்திற்குக் கொடுக்க வேண்டுமென்றும், 3 குடிதண்ணீர்க் கிணறுகள் தோண்டி கொடுக்குமாறும், தங்கச்சிமடம் ரயில் நிலையத்தில் ஒரு கூட்ஷெட் அமைக்கவேண்டுமென்றும், கடலில் தொழிலாளருக்கு ஆபத்து ஏற்படும் காலத்தில் உதவி புரிவதற்காக மோட்டார் ஆம்புலன்ஸ் படகு வசதி செய்து கொடுக்க சர்க்காரைக் கோரி தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# வர்க்கம் வளருது வளர்பிறை போலே!

## தமிழ்நாட்டில் புதிய சங்கங்கள்

### மோட்டார்

மேட்டுப்பாளையம்–நீலகிரி மோட்டார் தொழிலாளர் சங்கத்தின் சேலம் கிளை ஆரம்ப விழா 14-10-55ல் டி. ஏ. நாராயணசாமி செட்டியார் தலைமையில் நடந்தது. தோழர்கள் எஸ். எம். ராமையா, ஜி. சாமுவேல் முதலியோர் பேசினுர்கள்.

தலைவர் ஸ்ரீ குட்டப்பன், காரியதரிசி கே. செல்வராஜ், பொருளாலர் ஏ. யூப்கான், மற்றும் தோழர்கள் கரன்பாய், ரெங்கசாமி, சிவராம், தங்கவேல், தஸ்தகீர் முதலியவர்கள் நிர்வாகஸ்தர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்,

●

### மாவுமில்

சென்னை மாவுமில் ஊழியர் சங்கம் 23–9–55ல் ஏற்படுத்தப்பட்டது. தோழர்கள் பி. கே. ஜனுர்த்தன பிள்ளை–தலைவர், ஏ. சீனிவாசன்–உபதலைவர், டி. நாகராஜன்–காரியதரிசி, பி. சீனிவாசன்–உதவிக் காரியதரிசி, ராம்னிக்லால் எல். காந்தி–பொக்கிஷதாராகவும் மற்றும் 9 பேரடங்கிய நிர்வாகக் கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

●

### கைநெசவு

பட்டீஸ்வரம் கைநெசவுத் தொழிலாளர் சங்கம், திரு. எம். ஜி. சாமிநாத செட்டியாரைத் தலைவராகவும், திரு. எம். எஸ். சுந்தரம் செட்டியாரை காரியதரிசியாகவும்கொண்டு அமைக்கப்பட்டிருக்கிறது.

●

### தோல்

தருமபுரி தோல் பதனிடும் தொழிலாளர் சங்கம் அமைக்கப்பட்டுள்ளது. தோழர்கள் மா. முனியப்பன்–தலைவர், மாதவன்–உபதலைவர், கே. ஏ. பழனி–காரியதரிசி, செல்லன்–உதவி காரியதரிசி, பெருமாள்–பொருளாளர், மற்றும் 3 பேர் கமிட்டி அங்கத்தினர்கள்.

●

### பஞ்சாயத்

அரூரில் பஞ்சாயத் போர்டு தொழிலாளர் சங்கம் அமைக்கப்பட்டது. தோழர்கள் செம்பன்–தலைவர், எச். ஆர். கணேசன்–காரியதரிசி, அம்மாசி–பொக்கிஷதார், சித்தன், சின்னப்பன் அங்கப்பன் அங்கத்தினர்கள்.

●

### மீன் பிடி

ராமேஸ்வரத்தில், மூக்கையூர் மீன்பிடித் தொழிலாளர் சங்கம் 8–10–55ல் அமைக்கப்பட்டது. தோழர்கள் ஜெபமாலை பிச்சை தலைவர், கோ.சி. தம்பிராஜ், சு.வி; அ. ஜெபமாலை தாசன் உப தலைவர்கள், மு. ஆரோக்கியசாமி காரியதரிசி, பொ. வி. மாதவடியான் பூபாலராயர், உதவிக்காரியதரிசி, கொ.ம.இ. ஜோசப் பொருளாளர், மற்றும் ப.பி. அந்தோணி ராயப்பன், சா.மு. நட்சத்திரம், தொ.ச. ராயப்பன், நெ.ச. சூசை மாணிக்கம், அ.ல. மத்தேஸ், ஜெ. அல்போன்ஸ் வில்லவராயர், சீ.ச. மைக்கேல், ஆ.ரா. இஞ்ஞாசி, மூ. வ. சிமியோன் ஆகியோர் மெம்பர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

●

### ஓட்டல்

ஸ்ரீ வைகுண்டத்தில் தோழர் சொக்கலிங்கத்தை காரியதரிசியாகக்கொண்டு ஓட்டல் தொழிலாளர் சங்கம் அமைக்கப்பட்டது.

●

### பீடி

ஆம்பூரில் பீடித் தொழிலாளர் சங்கம் அமைக்கப்பட்டுள்ளது.

●

### சலவை

வள்ளியூரில் நாங்குனேரி தாலுகா சலவைத் தொழிலாளர் கூட்டத்தில்,

தலைவர் டி. சின்னச்சாமி, காரியதரிசி எஸ். குப்பான், உப தலைவர்களாக திருக்குறுங்குடி திரு. ந. சுடலைமுத்து அவர்களும், திரு. செ. இசக்கி அவர்களும், பொருளாளராக கோயில்பத்து சி. அருணுசலமும், மற்றும் 16 கமிட்டி மெம்பர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

●

### மண்பாண்டம்

சொக்கநாதன் புத்தூரில் மண்பாண்டத் தொழிலாளர் சங்கம் அமைக்கப்பட்டது. தலைவர்: இ. முப்புடாதி செட்டியார், காரியதரிசி: தி. பிள்ளையார் செட்டியார், பொக்கிஷதார்: செல்லையா செட்டியார், லைப்ரேரியன்: சுப்பையா செட்டியார் மற்றும் பெருமாள் செட்டியார், ரா. சுப்பையா செட்டியார், போ. முப்புடாதி செட்டியார், அ. அழகிரி செட்டியார், ரெங்கையா செட்டியார் சு. முப்புடாதி செட்டியார் ஆகியோர் மெம்பர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

●

### முடிதிருத்துவோர் சங்கம்

வடசென்னை முடிதிருத்துவோர் சங்கத் திறப்பு விழா 11-10-55ல் நடைபெற்றது. தலைவர் வி. சிங்காரவேலு, உபதலைவர் எம். துரைசாமி, காரியதரிசி டி. ஆர். வீரமலை, உபகாரியதரிசிகள் எம். எஸ். எஸ். மணி, ஆர். ஜெகநாதன் பொருளாஸர் சி. நடேசன் முதலியவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

## உண்ணுவிரதமிருந்த ஜனுர்த்தனம் போலீஸாரால் ஆஸ்பத்திரிக்கு அகற்றப்பட்டார்

கருமுத்து முத்து தியாகராஜ செட்டியார், தனது விருதுநகர் டெக்ஸ்டைல் மில்லை கதவடைப்புச் செய்திருப்பதையும்' வேலைப்பளுவைத் திணிப்பதையும் எதிர்த்து மதுரை மீனுக்ஷி மில் வாசல் முன்பாக உண்ணுவிரதமிருந்து வந்த திரு. ஜனுர்த்தனத்தை 13–10–55ம் தேதி, 18-வது உண்ணுவிரத நாளன்று பலத்த போலீஸ் படையுடன் ஸ்தல போலீஸ் அதிகாரிகள் அப்புறப்படுத்தி மதுரை சர்க்கார் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய்விட்டார்கள். திரு. ஜனுர்த்தனம் இருந்த இடத்திலிருந்த தட்டி, பாய், பந்தல் முதலிய சாமான்களையும் போலீஸார் கொண்டு போய்விட்டனர்.

மானேஜ்மென்டு எவ்வித சமரஸத்திற்கும் வர மறுக்கிறது. சர்க்காரும் தலையிட மறுக்கிறது. இதைக் கண்டித்து தொழிலாளர்கள் முதல் மந்திரிக்கு மகஜர் அனுப்பி யுள்ளார்கள்.

இது சம்பந்தமாக ராமநாதபுரம் ஜில்லா தொழிற் சங்க கவுன்ஸில் காரியதரிசி தோழர் ஏ. சீனிவாசன், 17–10–55ல் தொழில் மந்திரியைச் சந்தித்தார்.

## சின்னுளப்பட்டியில் 35 பேர்மீது வழக்கு

பவர்லூம் வந்தால் வேலை பறிபோய்விடுமென்று அஞ்சிய சின்னுளப்பட்டி கைத்தறி நெசவாளர்கள் ஆட்சேபணை எழுப்பியதும், அவர்கள்மீது போலீஸ் தடியடி நடத்தி, 35 பேர்களைக் கைது செய்ததும் யாவருமறிந்ததே.

பஞ்சாயத் போர்டு நிர்வாக அதிகாரியினுல்தான் இவ்வளவு அக்ரமங்களுல் நடக்கின்றன.

தொழிலாளர்களின் கிளர்ச்சி வலுப்பதைக் கண்டு ஜில்லா சுகாதார அதிகாரி தலையிட்டு பவர்லூம் ஓடுவதைத் தடைசெய்தார்.

35 பேர்மீது 151 கிரிமினல் செக்ஷன்படி குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது.

## திருச்செங்கோடு போனஸ்

திருச்செங்கோடு மில் தொழிலாளர்களுக்கு கடந்த 5 வருடங்களாக போனஸே கொடுக்கவில்லை. இந்த வருடம் தீபாவளிக்குமுன் போனஸ் கொடுக்க வேண்டுமென்று கோருகிருர்கள். மில் நிர்வாகம் சண்டித்தனம் செய்கிறது. தொழிலாளர்கள் ஆத்திரமுற்றிருக்கிருர்கள்.

## சென்னை மைசூர் பிரீமியர் மெட்டல் பாக்டரி ஹிந்துஸ்தான் ரோலிங் மில் கதவடைப்பு

வட சென்னையிலுள்ள மைசூர் பிரீமியர் மெட்டல் பாக்டரியும், ஹிந்துஸ்தான் ரோலிங் மில்லும் 19–9–55முதல் கதவடைப்பு செய்யப்பட்டிருக்கிறது.

தொழிற்சங்கத்தின் சார்பில் கூலி நிர்ணயம், சம்பள உயர்வு முதலிய கோரிக்கைகளை முன் வைத்து சர்க்கார் லேபர் ஆபிசர் தலையிட்டு மத்தியஸ்தம் செய்து வருகையில், தன்னிச்சையாக மானேஜ்மெண்டார் கதவடைப்பு செய்திருக்கிருர்கள்.

உற்பத்தியை அதிகரிக்கும்விஷயத்தில் கண்ணும் கருத்துமாயிருக்கும் முதலாளி 10, 15 வருட சர்வீஸ்காரர்களுக்குக்கூட 1 ரூபாய்க்கும் குறைவாக சம்பளம் கொடுக்கிருர். சிறிதுகூட விட்டுக் கொடுக்க மறுக்கிருர். பிரச்னையை மத்தியஸ்த கோட்டுக்கு விட வேண்டுமென்று சங்கம் முடிவு செய்த உடனே லாக் அவுட் செய்துவிட்டது நிர்வாகம். 175 பேர் தம் குடும்பங்களுடன் பட்டினி கிடக்கிருர்கள்.

# உழவர் அரங்கிலே..

## விவசாய ஊழியர்மீது தாக்குதல்

சிதம்பரம் தாலுக்கா சிவபுரி வட்டத்திலுள்ள விவசாயிகளின் ஒற்றுமையை சீர்குலைப்பதற்காக மிராசுதார்கள் பல முறைகளையும் கையாண்டு வருகிறார்கள். சிவபுரியில் 20-9-55ல் நடைபெற்ற வட்டக் கழகக் கமிட்டிக் கூட்டத்தை அடியாட்களைக் கொண்டு மிராசுதார்கள் கலைக்க முயற்சித்தனர். போலீசுக்கு இது தெரியப்படுத்தியும் இது சம்பந்தமாக அது எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லையாம். பின்னர் 23-9-55ல் சிவபுரி வட்ட விவசாய சங்கக் காரியதரிசி தோழர் கிருஷ்ணனை மிராசுதார்களின் அடியாட்கள் தாக்கி மண்டையை உடைத்திருக்கிறார்கள். கிருஷ்ணன் ஆஸ்பத்திரியில் சேர்க்கப் பட்டிருக்கிறார்.

### உபரி வரியால் விவசாயிகள் கஷ்டம் சர்க்கார் கவனிக்குமா?

கிருஷ்ணகிரி தாலுக்கா பாரூர் பிர்க்காவில் 14 சிறிய ஏரிகள் உள்ளன. இவ்வருடம் மழை சரிவர இல்லாமையால் நாலில் ஒரு பாகம்தான் சாகுபடி செய்யப்பட்டுள்ளது. உதாரணமாக பாரூர் ஏரிப் பாசனமான 5700 ஏக்கரில் இவ்வருடம் 1500 ஏக்கர் தான் விதைப்பாடு ஆகியுள்ளது. இதற்காக 2000 மூட்டை விதை நெல் செலவாகியுள்ளது. பருவ சமயத்தில் ஏரியில் தண்ணீர் இல்லாததால் பயிர்கள் காயத் தொடங்கின. எனவே கிடைத்த தண்ணீரைக்கொண்டு முற்றிப் போன நெல்நாற்றை நடவேண்டியதாயிற்று. சாகுபடி செலவைக்கூட சரிக்கட்டமுடியாமல் இருக்கும் நிலையில் ரூபாய்க்கு இரண்டணா உபரிவரி விதிக்க சர்க்கார் முடிவுசெய்துள்ளது சரியா? விவசாய மக்களின் கஷ்டநஷ்டங்களை சர்க்கார் கவனிக்குமா? இந்த உபரி வரியைக் கண்டித்து இப்பகுதியில் 500 கையெழுத்துகளை விவசாயிகளிடம் கம்யூனிஸ்ட் கட்சி வாங்கி ஜனாதிபதிக்கு அனுப்பியிருக்கிறது. இந்த சட்டத்தில் கையெழுத்திடக்கூடாது என்று அவரை வேண்டிக்கொண்டுள்ளது.

### விவசாய சங்க அமைப்பு

வத்ராப் பகுதியில் மீண்டும் விவசாய சங்கங்களைப் பலப்படுத்த ஆரம்ப வேலைகள் நடைபெறுகின்றன. 26-9-55ல் வத்ராப் பிர்க்கா விவசாயிகள் சங்கம் அமைக்கப்பட்டுள்ளது. இதற்கு தலைவராக தோழர் சோ. அ. அருணாசலத் தேவரும், காரியதரிசியாக தோழர் எம். நடராஜனும், தோழர்கள் அனுமந்தராய பிள்ளை, குப்பையாண்டி, திருவேங்கிடம், ஜெகன்னாதன், சுப்பையா, பெரியணன், சங்கிலி, முதலியோர் உறுப்பினர்களாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்கள்.

★

சீர்காழி தாலுக்கா வைத்தீஸ்வரன்கோவில் வட்டாரத்திலுள்ள 10 கிராமங்களிலிருந்து கிராம முக்கிய ஊழியர்கள் 25-9-55ல் தோழர் எஸ். ராஜமாணிக்கம் தலைமையில் கூடி வட்டார விவசாய சங்கத்தை அமைத்துள்ளார்கள்.

★

புதுக்கோட்டை ரேஞ்சு குளத்தூர் தாலுக்கா பாட்னுபட்டி கிராமத்தில் 27-9-55ல் விவசாயிகள் சங்கம் அமைக்கப்பட்டது. தோழர் ஏ. என். நல்லசெல்லக் கவுண்டர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

★

தஞ்சை ஜில்லா பட்டுக்கோட்டை தாலுக்கா கொத்தமங்கலத்தில் 1-10-55ல் விவசாய சங்கம் அமைக்கப்பட்டது. தோழர் மாசிலாமணி தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் 3000 பேர்கள் கலந்துகொண்டார்கள். தோழர்கள் ரெ. நாச்சான் கங்காணி தலைவராகவும், சி.சோ. தங்கசாமி காரியதரிசியாகவும், கே. எஸ். ரங்கசாமி பொக்கிஷதாரராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

### விவசாய ஊழியர் மரணம்

பொள்ளாச்சி தாலுக்கா ராமபட்டணம் விவசாய சங்க ஊழியர் ஜப்பார் 26-9-55ல் தம் 27ம் வயதில் காலமானதை வருத்தமுடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம். அன்னார் குடும்பத்ினருக்கு எம் ஆழ்ந்த அனுதாபங்கள்.

### கள்ளப் புலியூர் பஞ்சாயத் தேர்தல் வெற்றி

கும்பகோணம் தாலூகா கள்ளப் புலியூர் வட்டத்திற்கு 29-9-55ல் பஞ்சாயத் போர்டு தேர்தல் நடைபெற்றது. நிலப் பிரபுக்களால் நிறுத்தப்பட்ட அத்தனை அபேட்சகர்களும் தோற்கடிக்கப் பட்டனர். விவசாயி சங்கத்தின் ஆதரவு பெற்ற அனைவரும் வெற்றிமாலை சூடினர்.

தோழர் எம். ராமையன், பஞ்சாயத் போர்டு தலைவர்.

தோழர்கள் வி. சுப்ரமணியன், ஏ. வீரமுத்து, கோ. கலியபெருமாள், ஆறுமுகம், கே. தங்கையன், கலியமூர்த்தி ஆகிய ஆறு பேர்களும் பெருவாரியான ஓட்டுகளால் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

## தோல் பதனிடும் தொழிலில் இயந்திரத்தைப் புகுத்தாதே!

### ஏ. கே. கோபாலன் கடிதம்

தோல் பதனிடும் தொழிலில் இயந்திரத்தைப் புகுத்துவதைக் கண்டித்து, டில்லி மக்கள் சபை கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் ஏ. கே. கோபாலன் தொழிலாளர் மந்திரி திரு. கந்துபாய் தேசாய்க்கு 28-9-55ல் கடிதம் எழுதியிருக்கிறார்.

**கடிதம்**

எனது அன்புள்ள கந்துபாய் தேசாய் அவர்களுக்கு,

திண்டுக்கல்லில் சுமார் 1600 தொழிலாளர்களைப் பாதிக்கும் முறையில், தோல் பதனிடும் குடிசைத் தொழிலை அழிக்கும் முறையில், ஆலோசனையின்றி, "நிக்கன ரமைப்புத் திட்டம்" புகுத்தப்படுவது எனது கவனத்துக்கு சமீபத்தில் கொண்டுவரப்பட்டது.

திண்டுக்கல்லில் இரண்டு தோல் ஷாப்பு முதலாளிகள் தோல் பதனிடப்படுவதற்கு நவீன இயந்திரத்தைப் புகுத்தியிருப்பதாக திண்டுக்கல் தோல் பதனிடும் தொழிலாளர் சங்கம், தங்களுக்கு எழுதியுள்ள 24-9-55-ம் தேதிய கடிதத்தின் பிரதியில் இருந்து அறியலானேன். இந்த நடவடிக்கை இந்த குடிசைத் தொழிலையும், அதில் வேலை செய்யும் தொழிலாளர்களின் கூலியையும் மிக மோசமாகப் பாதிக்கும் என்பதை நான் தங்களுக்குச் சுட்டிக்காட்ட வேண்டிய அவசியம் இல்லை. இயந்திரம் புகுத்தப்படுவதினால் வேலை இழப்போருக்கு மீண்டும் வேலை கொடுப்பதற்கு எந்த ஏற்பாடும் இல்லை என்பதைக் கண்டு நான் அஞ்சுகின்றேன்.

எனவே, இதைப் பரிசிலனை செய்து திண்டுக்கல்லில் உள்ள தோல் ஷாப்புகளில் மிஷின் அமைப்பது அனுமதிக்கப்படுமானால், எந்த தொழிற்சாலையிலும் சம்பள வெட்டு இல்லாமலும், ஏற்கெனவே வேலை செய்த தொழிலாளர்களை வேலையைவிட்டுவெளியே தள்ளாமலும் செய்யப்பட வேண்டும் எனக் கேட்டுக்கொள்ளுகிறேன். இது விஷயத்தில் எடுக்கும் நடவடிக்கை குறித்து எனக்குத் தெரிவிக்குமாறு வேண்டுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,

ஏ. கே. கோபாலன்.

4, அசோகா ரோடு,
புது டில்லி.

## விஜயகுமார் மில் கதவடைப்பு

### 600 பேர் பட்டினி

600 பேர்கள் வேலைசெய்து வந்த பழனி விஜயகுமார் மில் 10-10-55 முதல் கதவடைப்பு செய்யப்பட்டுள்ளது.

இந்த மில் 1951-ல் துவக்கப்பட்டது. ஆரம்பத்தில் இதில் 32 ஸ்பின்னிங் மெஷின்கள் ஓடியது. இப்பொழுது 56 மெஷின்கள் ஓடுகின்றன. 32 மெஷின்கள் ஓடும்போது டெம்பரவரி தொழிலாளர்கள் (இப்பொழுது பெர்மனென்ட் தொழிலாளர்கள்) 8 டாப்பர்களும், 7 பேர்கள் ரோடு கூட்டுவதற்கும் வைக்கப்பட்டிருந்தது. புதிதாகப் பூட்டப்பட்ட 24 மெஷின்களுக்கு, அப்ரண்டீஸ் என்ற ரூபத்தில் சுமார் 200 தொழிலாளர்கள் வரை சேர்க்கப்பட்டார்கள். இவர்களுக்கு 5 மாதம்வரை சம்பளம் இல்லை. பிறகு 8 அணா சம்பளம் தரப்படுகிறது. இவர்களனைவரும் திறமையுள்ளவர்கள் என்று நிர்வாகமே கூறினாலும் இந்த நிலைமைதான்.

பல மாதங்களாக ஸ்பின்னிங் டிபார்ட்மெண்டில் கொடுத்துவந்த அநியாயக்காரர்களை திடீரெனக் குறைத்து 15 தொழிலாளிகள் வரை தினசரி லீவில் அனுப்பியதால், 53 ஸ்பின்னிங் மெஷின்களை 8 அரியாக்காரர்களைக் கொண்டு எடுக்கச் சொன்னதால் வேலை செய்ய முடியவில்லை. பம்பு எடுக்கும் ஆட்களை லீவில் அனுப்பிவிட்டதால் சிம்ப்லக்ஸ் டிபார்ட்மெண்டில் பம்பு சப்ளை செய்ய முடியாமல் தானாகவே மிஷின்கள் அரியா ஆகி நின்று விடுகின்றன. கோயமுத்தூரிலும் மதுரையிலும் உள்ள வேலைப்பளுவைவிட அதிகமாகப் பார்க்கும்படி நிர்ப்பந்திக்கிறார்கள். ஷிப்டிற்கு 10, 15 பேர் அதிகமாக வேலை பார்த்து வந்தவர்களுக்கு, வேலை தராமல், லீவில் அனுப்பிவிட்டு, அவர்களது வேலையையும் செய்யும்படி கசக்கிப் பிழிகிறார்கள். ரீலிங் டிபார்ட்மெண்டில் 9 மணி நேர வேலை பாவு இப்பொழுது செய்யவேண்டுமென்கிறார்கள்.

வேலைப்பளுவை எதிர்த்த 27 பேர்மீது நோட்டீஸ் கொடுக்கப்பட்டது.

உடனே சர்க்கார் தலையிட்டு மில்லைத் திறந்து பழைய முறையில் ஓட்டுவதற்கு உத்திரவிட வேண்டும்.

கே. பஞ்சாட்சரம்.
தொழிற்சங்க உதவிக் காரியதரிசி.

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

சைக்குப் போகாமல் ஹர்த்தால் செய்தனர். திரிபுராவை அஸ்ஸாமுடன் இணைப்பது 'கொள்கையற்றது, விசித்திரமானது' என்று சுதந்திர திரிபுரா கமிட்டி பிரகடனம் செய்திருக்கிறது. திரிபுரா தனி ராஜ்யமாக இருக்கவேண்டுமென்றும், ஜனநாயக சீர்திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென்றும் அது கோரியிருக்கிறது. இந்தக் கமிட்டியில் கம்யூனிஸ்ட் கட்சி, பி. சோ. கட்சி, புரட்சி சோஷலிஸ்ட் கட்சி முதலிய அரசியல் கட்சிகளும், பல தனிப்பட்ட பிரமுகர்களும் சேர்ந்திருக்கிறார்கள். திரிபுரா தனி ராஜ்யமாக இருக்கவேண்டுமென்ற கோரிக்கைக்காக இந்தக் கமிட்டி ஒரு ஐக்கிய இயக்கத்தை நடத்திவருகிறது.

திரிபுரா ராஜ்யக் காங்கிரஸ் கட்சித் தலைமைக்கும் நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. ஏராளமான காங்கிரஸ் ஊழியர்கள் திரிபுரா இணைக்கப்படுவதை எதிர்க்கிறார்கள். ஆதலால் சுதந்திர திரிபுரா என்ற கோரிக்கை நாளுக்குநாள் வலுப்பெற்றுவருகிறது.

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

சாரத்தில் இறங்குவது அவர்களது வழக்கமாக உள்ளது.

மேற்கூறிய இரு புத்தகங்களில் ஒன்று பெரு முதலாளி டாட்டாவிடம் உத்தியோகம் பார்த்த கம்யூனிஸ எதிரி எம். ஆர் மசானி எழுதியது. மற்றது அமெரிக்காவினால் பண உதவி அளிக்கப்படும் ஜனநாயக ஆராய்ச்சிக் கழகம் வெளியிட்டது. நேர்மையைக் கைவிட்டு கூலிக்காக மாறடிக்கும் இத்தியாதி பொய்யர்களிடம் அடைக்கலம் புகவேண்டிய நிலைமை பனம்பள்ளிக்கு ஏற்பட்டது.

### வெகுஜனக் கட்சி

ஏ. ஷாகுல், உத்தமபாளையம்.

**கேள்வி:** வெகுஜனக் கம்யூனிஸ்ட் கட்சியைக் கட்டுவதின் அர்த்தம் கட்சியில் விரும்பியவர்களை எல்லாம் அங்கத்தினராகச் சேர்த்துக்கொள்வதா?

**பதில்:** சகல பகுதி மக்களின் நம்பிக்கையைபெறும் கட்சியைக் கட்ட வேண்டும்; அத்துடன் ஒருவரின் விருப்பத்தின்படிமட்டுமல்ல கட்சியின் சட்டதிட்டங்களின் படியே நிறைய அங்கத்தினர்களை சேர்க்க வேண்டுமென்பதே அதன் அர்த்தம். —கே. எம்.

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

தொழிலாளர் ஒன்றுபட்ட போராட்டங்கள் வெற்றிபெற்று வருவதை ஏஐடியுசி இந்தியத் தொழிலாளி வர்க்கத்திற்கு எடுத்துக் காட்டி, எங்கும் தொழிலாளர் நல்வாழ்விற்காக, பிற்போக்கு சக்திகளின் தாக்குதல்களை முறியடித்து முன்னேற வேண்டுமென்று முழங்கி வருகிறது.

1954ம் ஆண்டு கல்கத்தா மகாநாட்டின் அறைகூவலுக்கிணங்க ஏ.ஐ.டி.யு.சி.யில் உறுப்பினர் தொகை உயர்ந்துள்ளது. 1954 மே மாதம் முடிய மொத்தம் 1035 தொழிற்சங்கங்களில் ஏழு லட்சத்து இருபத்து ஏழாயிரத்து நானூற்று இருபது அங்கத்தினர்கள் திரண்டு நிற்கின்றனர்.

## "ஜனசக்தி" தினசரி நிதி வசூல்

## 20-10-55 முடிய மொத்த வசூல் ரூ. 71,297-12-11

| ஜில்லா | | கடந்த 3 வார வசூல் | | | | இதுவரை மொத்த வசூல் | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. சென்னை | ... | 277 | 2 | 0 | - | 3,082 | 7 | 3 |
| 2. செங்கற்பட்டு | ... | | | | - | 188 | 0 | 0 |
| 3. வட ஆற்காடு | ... | | | | - | 949 | 0 | 9 |
| 4. தெ. ஆற்காடு | ... | | | | - | 651 | 0 | 0 |
| 5. தஞ்சை | ... | 103 | 4 | 0 | - | 6,515 | 14 | 10 |
| 6. திருச்சி | ... | | | | - | 4,665 | 3 | 3 |
| 7. சேலம் | ... | 261 | 11 | 9 | - | 3,735 | 3 | 10 |
| 8. கோயமுத்தூர் | ... | 110 | 1 | 0 | - | 9,629 | 13 | 0 |
| 9. மதுரை | ... | | | | - | 23,426 | 11 | 3 |
| 10. ராமநாதபுரம் | ... | 5 | 0 | 0 | - | 6,264 | 15 | 3 |
| 11. திருநெல்வேலி | ... | 58 | 1 | 0 | - | 10,101 | 13 | 3 |
| 12. திரு-தமிழகம் | ... | | | | - | 175 | 15 | 0 |
| 13. புதுச்சேரி | ... | | | | - | 1,026 | 5 | 0 |
| 14. இதர மாகாணங்கள் வெளிநாடுகள் முதலிய | | 14 | 12 | 3 | - | 713 | 4 | 3 |
| 15. இதர வசூல்கள் | ... | | | | - | 172 | 2 | 0 |
| ஆக ரூ. | | 830 | 0 | 0 | - | 71,297 | 12 | 11 |

## 20—10—55 தேதிமுடிய வசூல் விபரம்

### சென்னை ஜில்லா

சென்னை: மவுண்ட்ரோடு: என். நாராயண ராவ் ரூ. 2, தோழர் என். எஸ். ருக்மணி மூலம்: எஸ். வி. பாலசுந்தரம், பி. வெங்கட்ரமணு தலா ரூ. 2; பொறைக்கலம் ரூ. 1.

### தஞ்சை ஜில்லா

மன்னார்குடி தாலூகா: கீழநெம்மேலி வை. ஷண்முகம்—பட்டம்மாள் திருமண நன்கொடை ரூ. 3.

பட்டுக்கோட்டை தாலூகா: கரம்பயம் தோழர் எஸ். சீரங்கம் ரூ. 10.

குளமங்கலம்: கமலம்—ரெத்தினவேலு திருமண நன்கொடை ரூ. 5, வள்ளியம்மை—அ. ராஜகோபால் திருமன நன்கொர்டை ரூ. 4, கரம்பயம் தோழர் ஸ்ரீரங்கம் திருமண நன்கொடை எம். காத்தமுத்து மூலம் ரூ. 10.

கும்பகோணம் தாலூகா: தாராசுரம் வி. கனகசபை திருமண நன்கொடை பி. வெங்கடேசன் எம்.எல்.ஏ., மூலம் ரூ. 5, மணலூர் விவசாயிகளிடமிருந்து வசூல் ரூ. 10.

கும்பகோணம் டவுன் கமிட்டி மூலம் ரூ. 4, பாண்டியன் ரூ. 2, ரெங்கராஜன் ரூ. 1, கோவிந்தராஜன் அணு 8, ஜெயராமன் ரூ. 7, வி. பாலு ரூ. 2, சாமிநாத பத்தர் ரூ. 1, பாலு பத்தர் அணு 8, மூன்று தோழர்கள் தலா அணு 4, கிருஷ்ணன் அணு 8, நாகநாதன் அணு 8, நடராஜன் ரூ. 2-8-0, ஒரு அனுதாபி அணு 8.

தஞ்சை ஜில்லா கமிட்டி தோழர் கே. பி. நடராஜன் பார்க்கர் [பே]னாவை நன்கொடை கொடுத்து விற்பனை செய்த வகையில் ரூ. 25. ஆக ரூ. 94-12-0.

### திருநெல்வேலி ஜில்லா

சொக்கநாதன்புத்தூர்: இங்கு நடைபெற்ற புலிவேஷம்-கம்பு விளையாட்டில் தோழர் கே. பொட்டல் முத்துக்கு அன்பளிப்பாகக்கிடைத்த வேஷ்டி ஏலம் விட்டதில் கிடைத்த ரூ. 4.

நெல்லை: டி. லட்சுமணன் ரூ. 6.

### சேலம் ஜில்லா

பள்ளிபாளையத்தில் 13–10–55ல் கம்யூனிஸ்ட் கட்சி பொதுக் கூட்டத்தில் தோழர் பி. ராமமூர்த்தி எம்.எல்.ஏ., அவர்களிடம் ஜனசக்தி நிதிக்காக தோழர் ஏ. நாச்சிமுத்து கொடுத்த விபரம்:

வி. கிருஷ்ணன், கு. ராமசாமி, அம்மாசை, மீரான், பி. ஆறுமுகம், பெரியண்ண செட்டி, சித்தனுதன், கோவிந்தராஜு, சீரங்க செட்டி, மாரப்பன், எம். காளி செட்டி, ராமசாமி, வி. பாலகிருஷ்ணன், வி. ராமசாமி, பெ. மாரியப்ப முதலி, டி. எம். வி. பெருமாள், ஆர். நஞ்சப்பா, சு. பெருமாள், பூ. கு. தங்கவேல், சி. அர்த்தனரிசாமி, டீ. வள்ளி, ஆர். ரங்கசாமி, கிருஷ்ணன், யூ. செங்கோட முதலி, வாசு, ஏ. ஆர். பழனிசாமி, து. நஞ்சப்பசெட்டி, கே. ராமசாமி தலா 8 அணு ஆக ரூ. 14.

34 தோழர்கள் தலா 4 அணு வீதம் ரூ. 8–8–0;

பொங்கியண்ணன் பேக்டரி தொழிலாளர் ரூ. 8-3-0, பீரான் மூலம் பேக்டரி தொழிலாளர்கள் ரூ. 8-9-3, கலிய பெருமாள் மூலம் பேக்டரி தொழிலாளர்கள் ரூ. 6-14-0, வெடியரசம்பாளையம் கிராம நெசவு தொழிலாளர்கள் ரூ. 4-8-0, பட்டு மிஷின் தொழிலாளர்கள் ரூ. 3, ஆலாம்பாளையம் விவசாயிகள் சங்கம் ரூ. 2-8-0யும் காசுமாலை 1க்கு ரூ. 2-14-6, தச்சுவேலை தொழிலாளர் காசுமாலை 1க்கு ரூ. 2-2-0, சி. ஆர். பேக்டரி தொழிலாளர்கள் ரு. 3-8-0, சி. நாச்சிமுத்து மூலம் பேக்டரி தொழிலாளர் ரூ. 2-8-0, கே. கந்தசாமி, கே. ராமசாமி, ஏ. அர்த்தனரி, கே. பொங்கியண்ணன், என். பெருமாள்சாமி, வி. அர்த்தனரிசாமி தலா ரூ. 2; எல். என். ஷண்மூகம் ரூ. 3-4-0, ச. கோபால் ரூ. 1-1-6, நாகைய்யா பேக்டரி தொழிலாளர் ரூ. 1-4-0, அர்த்தனரிசாமி ரூ. 1-4-0, சீனிவாசன் ரூ. 1-1-0, சொக்கப்பா மூலம் பேக்டரி தொழிலாளர் ரூ. 1, ஏ. நாச்சிமுத்து, எம். ராமலிங்கம், செ. பெருமாள், தம்மண்ணன், எஸ். ராதா கிருஷணன், எஸ். சைதலி, ரங்கைய்யன், கிருஷ்ணன், காவேரி செட்டி, குருநாதன், முருகன், மூனியப்பன், பாண்டுரங்கன், ஆர். ரங்கசாமி, சு. ராமநாதன், ஆர். பொன்னுசாமி, நடேசன் தலா ரூ. 1-ஆக ரூ. 18, ஒரு நண்பர் மூலம் ரூ. 1-2-0, ஒ. ஏ. பேக்டரி தொழிலாளர்கள் ரூ. 1.

இதர வசூல் ரூ. 116-15-6, வசூல் விட்டது வரவு ரூ. 2-2-0.

பி. ராமமூர்த்தி கூட்ட உண்டி வசூல் வரவு ரூ. 14-7-0.

ஆக ரூ. 244–11–9.

### கோவை ஜில்லா

திருப்பூர்: அனுப்பர்பாளையம்-பாத்திரத் தொழிலாளிகளும், பொதுமக்களும் தோழர் பி. ராமமூர்த்தியிடம் 12-10-55ல் பணமுடிப்பாகக் கொடுத்தது ரூ. 40.

திருப்பூர் டவுன்: பொதுக்கூட்டத்தில் தோழர் பி. ராமமூர்த்தியிடம் கொடுத்த பணமுடிப்பும், காசுமாலைகளாக அளித்ததும் ரூ. 70-1-0, ஆக ரூ. 110–1–0.

### ராமனுதபுரம் ஜில்லா

வத்திராயிருப்பு: தம்பிபட்டி எ. கே. சுப்பையா மூலம்: எம். வெள்ளைச்சாமி ரூ. 2 எம். குமாரசுவாமித் தேவர், மூஸ்தபா தலா ரூ. 1. கோ. மாரிமுத்து, ரா. காழித் தேவர் தலா 0-8-0 ஆக ரூ. 5.

### இதர மாகாணங்கள்

கோலார் தங்கவயல்: சாம்பியன் தொழிற் சங்க வருடாந்திர ஜெனரல்பாடிக் கூட்டத்தில் தோழர் கோவிந்தசாமி பாட்டுப்பாடி வசூலித்தது ரூ. 3-0-0.

# ஏ.ஐ.டி.யு.சி. அறைகூவல்

## ராணுவ மோஸ்தர் சர்க்கார் ஆதிக்க தொழிற்சங்கம் அமைப்பதை எதிர்ப்பீர்!

பம்பாய் தொழில் உறவு சட்டமும், இதுபோன்ற கருப்புச்சட்டங்களும் இன்று பம்பாயிலும், மத்தியப்பிரதேஷிலும், மத்தியப்பாரத்திலும் நடைமுறையில் உள்ளன.

பம்பாயில் இச்சட்டமானது பஞ்சாலை, மின்சாரம், ரோடு போக்குவரத்து, சர்க்கரைத் தொழில் ஆகியவற்றில் அமுல் நடத்தப்படுகிறது.

மத்தியப்பிரதேஷில் ஏறக்குறைய எல்லாத் தொழில்களிலும் அமுலாகி வருகிறது.

இந்த 3 ராஜ்யங்களிலும் 10 லட்சத்திற்கு மேற்பட்ட தொழிலாளர்கள்மீது இச்சட்டம் பிரயோகிக்கப்பட்டு வருகிறது.

இந்தச் சட்டத்திற்குப் பின்னுல் உள்ள உள்நோக்கம் என்ன? தொழிலாளி வர்க்கத்தின் தீவிர தொழிற்சங்க இயக்கத்தை நசுக்கிவிடவும் - ஆளும் வர்க்கம் முதலாளிகள் ஆகியோரின் நலன்களைக் காக்க, தொழிலாளி வர்க்கத்தின்மீது சர்க்கார் ஆதிக்கமுள்ள தொழிற்சங்க இயக்கத்தைத் திணிப்பதும்தான் இச்சட்டத்தின் அந்தரங்க நோக்கம். எல்லா வேலை நிறுத்தங்களையும் இச்சட்டம் தடை செய்யப் பார்க்கிறது. தொழில் தகராறுகளைத் தீர்க்க கட்டாய சமரசம், கட்டாய ஆர்பிட்ரேஷன் ஆகியவற்றை தொழிலாளர்மீது இச் சட்டம் சுமத்துகிறது.

இந்தக் கருப்புச் சட்டத்துக்கு எதிராக பம்பாயிலும் இதர ராஜ்யங்களிலுமுள்ள தொழிலாளி வர்க்கம் மிகப்பெரிய போராட்டங்களை நடத்திற்று. ஆனல், அரசாங்க அதிகாரத்தின் உதவியினுலும், முதலாளிகள் நேரடியாக ஊக்கமூட்டி உதவியதாலும், கடுமையான அடக்குமுறை நடவடிக்கைகளினுலும், ஆளும் கட்சியாகிய காங்கிரஸ் கட்சியானது, வெறுப்புக்குரிய இக்கருப்புச் சட்டத்தைப் பிரயோகிப்பதின் மூலம், மேற்கூறிய ராஜ்யங்களில் தீவிர தொழிற்சங்க இயக்கத்தை பிளவுபடுத்துவதிலும் கழுத்தை நெறிப்பதிலும் ஓரளவு வெற்றி பெற்றது.

### தாக்குதல் அம்சங்கள்

பம்பாய் தொழில் உறவு சட்டத்தின் கொடுமையான அம்சங்களைப் பாருங்கள்:

★ இச் சட்டம் தொழிலாளர்களின் வேலைநிறுத்தம் செய்யும் உரிமையை அப்படியே பறித்துவிடுகிறது. கட்டாய சமரசம், ஆர்பிட்ரேஷன்கள் மூலம், சாக்குப் போக்குச் சொல்லி, தாமதிப்பதும் ஒத்திப்போட்டுக்கொண்டே போவதும் இச் சட்டத்தின் அம்சமாகும்.

### உரிமை கிடையாது

★ ஒரு தொழிலுக்கு ஒரு சங்கமும், கூட்டு பேரமும் வேண்டுமென்ற பேரால், இச் சட்டம் செய்வதென்ன? மொத்த தொழிலாளரில் 15 சதமான அங்கத்தினர்கள் ஒரு சங்கத்தில் இருக்கிறார்களென்றல், அந்தச் சங்கத்துக்கு பிரதிநிதித்வ அந்தஸ்து அளிக்கப்படுகிறது. அந்த யூனியன் தலைவர்கள், தொழிலாளர்களுடைய ஆலோசனையைக் கேட்காமலும், அவர்களது ஒப்புதல் இல்லாமலும் தன் அங்கத்தினர்கள் சார்பாக முதலாளிகளுடன் உடன்படிக்கை செய்துகொள்ள இச் சட்டம் அனுமதிக்கிறது. தொழிலாளர்களுடைய நலன்களுக்கு அந்த உடன்படிக்கையானது விரோதமாக இருந்தால் கூட, அந்த ஒப்பந்தத்தை மாற்றவோ, திருத்தவோ, நிராகரிக்கவோ தொழிலாளர்களுக்கு எந்த வழியும் கிடையாது.

### வாதாட முடியாது

★ இச் சட்டம் இத்துடன் நிற்கவில்லை. தொழிலாளர்களின் அபிமானத்திற்குரிய வேறு எந்தச் சங்கத்துக்கும் கோரிக்கைகளைக் கேட்கவோ, கோர்ட்டுகளில் வாதாடவோ, கோர்ட் தாவாக்களில் தலையிடவோ இச்சட்டப்படி உரிமை கிடையாது. தொழிலாளர்கள் மேல் கோர்ட் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டால், அதை எதிர்த்து தொழிலாளர்கள் வாதாடவேண்டுமென்றல், அங்கீகரிக்கப்பட்ட சங்கம் மூலமாகத்தான் வாதாட வேண்டுமென்று இச்சட்டம் நிர்ப்பந்தப்படுத்துகிறது. இந்தியப் பிரஜை என்ற முறையில் குடியரசு சட்டப்படி ஒரு தொழிலாளி, "கோர்ட்டில் சென்று தன் நியாயத்தைப் பெற தானே வாதடலாம், அல்லது தன்னுடைய சொந்த விருப்பத்திற்கு ஏற்ற ஆட்கள் மூலம் வாதாடலாம்." இந்த அடிப்படை உரிமையைப் பறித்துவிடுகிறது இச் சட்டம்:

★ நடைமுறையில் இந்தச் சட்டம் இதர யூனியன்கள் இருப்பதை அங்கீகரிக்காதபடியால் அங்கீகரிக்கப்பட்ட, சர்க்காரால் போஷிக்கப்பட்ட சங்கத்துக்கு ஏகபோக உரிமை கொடுக்கப்படுவதால் —தொழிலாளர்களுடைய விருப்பத்துக்கு எதிராக, அவர்களை அச்சங்கத்தில் சேரும்படி நிர்ப்பந்திக்கிறது. சட்டபூர்வமான உரிமைகள் இதர சங்கங்களுக்கு இல்லாததால், தொழிலாளரின் உண்மைச் சங்கம் என்ற முறையில் திறமையாக இயங்குவது அசாத்தியமாகி அழிந்து போகின்றன.

### அதிகாரவர்க்கம் பெருகும்

★ 15 சதமான அங்கத்தினர்களைக்கொண்ட சங்கத்தைச் சிருஷ்டித்து, அதற்கு ஏகபோக உரிமைகளும் கொடுப்பதால், தொழிற் சங்கங்களில் ஊழல் மிகுந்த அதிகார வர்க்கப் பேர்வழிகள் குவிய ஆரம்பித்துவிடுவார்கள். தொழிலாளர்களது நலன்களைப் பற்றியோ அல்லது தொழிலாளர்களுக்குப் பொறுப்புதாரிகளாக இருக்கவேண்டுமென்பதைப்பற்றியோ இந்த அதிகார வர்க்கக் கும்பலுக்கு அக்கரை இருக்காது. தொழிலாளர்களுக்கு எவ்வித கடமையும் செலுத்தாமலேயே, இந்தக் கும்பல் பிரதிநிதித்துவம் வகிக்கவும், பேரம் பேசும் ஏஜெண்டாக இருக்கவும், கோர்ட்டுகளில் வாதாடவும், கோர்ட் நடவடிக்கைகளில் ஈடுபடவும் இச்சட்டம் உரிமை கொடுக்கிறது.

### நீதிபதிகளின் தீர்ப்பை சர்க்கார் மதிக்கவில்லை

இச்சட்டத்தில் உள்ள ஜனநாயகத்துக்கு விரோதமான, மிகமிக மோசமான பல அம்சங்களை எதிர்த்து ஹைகோர்ட்டுகளிலும், உயர்தர விசாரணைக் கோர்ட்டுகளிலும் வாதாடியபோது, இந்த அம்சங்களுக்கு விரோதமாக முக்கியமான நீதிபதிகள் பலமாக அபிப்பிராயம் தெரிவித்து, தொழிலாளர்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்திருக்கிறார்கள்; 15 சதமான சங்கத்துக்கு எதிராகத் தீர்ப்புக் கூறியிருக்கிறார்கள். ஜட்ஜுகளின் தீர்ப்புகளை சர்க்கார் மதித்ததா? மதித்து, தீர்ப்புகளின் வெளிச்சத்தில் தொழிலாளர்களுக்கு அனுகூலமாக சட்டத்தில் திருத்தங்கள் செய்ததா? கிடையாது. அதற்குப் பதிலாக நீதிபதிகள் கண்டித்த அந்த ஜனநாயக விரோத அம்சங்களை நிலை நாட்டுவதற்கு என்னென்ன திருத்தங்களெல்லாம் செய்யலாமோ அத்தனையும் செய்தார்கள்.

### என்ன தைரியம்!

பம்பாய் சர்க்காரைப் பாருங்கள். அது சமீபத்தில் செய்ததென்ன? அந்த 15 சதமான பிரதிநிதித்வ சங்கத்தைத் தவிர, வேறு எந்தச் சங்கங்களும் கோர்ட்டுகளில் வாதாடாமல் இருப்பதற்காக, மத்திய சர்க்காரின் சம்பளப் பட்டுவாடா சட்டத்தையும், அப்பலேட் ட்ரிபியூனல் சட்டத்தையும்கூட பம்பாய் சர்க்கார் திருத்தியிருக்கிறார்கள்.

### அபாயம்! அபாயம்!

பம்பாய் தொழில் உறவுச் சட்டத்தைப் போன்று, இந்தியா முழுவதுக்கும் மத்திய தொழில் சட்டம் கொண்டுவர இந்திய சர்க்கார் யோசித்து வருகிறதென்பதைக் கண்டு, அகில இந்திய

(2-ம் பக்கம் பார்க்க)

## ஜனசக்தி நிதி

## சேலம், கோவை ஜில்லாக்களிலிருந்து ரூ. 1,200

அக்டோபர் முதல் இரண்டு வாரங்களில் தமிழ்நாட்டில் தோழர் பி. ராமமூர்த்தியின் சுற்றுப்பிரயாணத்தின்போது சேலம் ஜில்லாவில் பள்ளிபாளையம், குமாரபாளையம், கொங்கணபுரம், திருச்செங்கோடு ஆகிய ஊர்களிலும், கோவை ஜில்லாவில் உடுமலைப்பேட்டை, திருப்பூர் ஆகிய ஊர்களிலும் ஜனசக்தி நிதிக்கு வசூலான தொகையில் ரூ. 1,200 நமக்கு வந்துசேர்ந்துள்ளது. சம்பந்தப்பட்ட இடங்களிலிருந்து விபரங்கள் வந்ததும் பிரசுரிக்கிறோம்.

## இந்தோனேஷியா தேர்தல் . . .

(கடைசி பக்கத் தொடர்ச்சி)

கம்யூனிஸ்ட் கட்சி உட்பட சகல கட்சிகளின் ஆதரவும் அவசியம் என்பதையும் தேசியக் கட்சி அங்கீகரித்திருக்கிறது. அலி ஜோஜோ மந்திரி சபையின் ஆட்சி நடைபெற்றபோது, தேசியக் கட்சி, மஸ்ஜூமி சோஷலிஸ்ட் கூட்டணி போன்றதல்ல என்பதைப் பட்டவர்த்தனமாக எடுத்துக்காட்டியது தேர்தலில் முதலிடம் பெற்றதற்கு இதுவே காரணம்.

### பாடுபடுவோம்

காலனியாதிக்க எதிர்ப்புக் கொள்கையில் விசுவாசத்துடனும் கொள்கைப் பிடிப்புடனும் தன் பரம்பரைக்கேற்ப நடக்குமானல், ஆசிய ஆப்பிரிக்க மகாநாட்டு முடிவுகளை ஒட்டிய வெளிநாட்டுக் கொள்கையை அனுசரிக்குமானல் அணிகளிலுள்ள ஊழல் கும்பலை ஒழித்துக்கட்டுமானல் இக்கட்சி அதிமுக்கியமான தேசியக் கட்சியாக நீடித்துத் திகழும் என்பது நிச்சயம்.

தேசத்தில் பிரதானக்கட்சிகளில் ஒன்ருக முடிஉயர்த்திவரும் வகையில் கம்யூனிஸ்ட் கட்சி வெற்றிவாகை சூடியிருக்கிறது. இதற்குக் காரணம் தேசிய ஐக்கியத்திற்காகக் கட்சி கடைப்பிடித்துவரும் கொள்கையேயாகும். தொழிலாளி மக்களுக்கும் கட்சிக்குமிடையே நெருங்கிய உறவு இருப்பதையும் இது காட்டுகிறது. காலனியாதிக்கத்திற்கு எதிராக சமாதானத்திற்காகவும், குடியரசின் ஜனநாயகக் கோட்பாடுகளைப் பேணிக்காத்து கட்டி வளர்க்கவும், தேசிய ஐக்கியத்தை நிலைபெறச் செய்யவும், கட்சி பின்பற்றிவரும் கொள்கைகளின் பலனுக லட்சோப லட்சம் வாக்காளர்கள் ஆதரவளித்திருக்கிறார்கள்.

ஜனநாயகக் கட்சிகள் தேர்தல் காலத்தில் கொடுத்த வாக்குறுதிகளை செயலில் காட்டினுல் அதன் விளைவாக அமைக்கப்பெறும் மந்திரி சபை அலி சர்க்காரைவிட செல்வாக்குள்ளதாக இருக்கும், இது சாத்தியமான ஒரு காரியம். இதைச் செயல்படுத்த நாம் பாடுபடுவோம் என்கிறார் இந்தோனேஷியன் கம்யூனிஸ்ட் கட்சியின் காரியதரிசி தோழர் ஐதிக்.

# இந்தோனேஷிய தேர்தல்

## கம்யூனிஸ்ட் கட்சியின் கருத்து

# உலக அரங்கில்

இந்தோனேஷியாவில் பொதுத் தேர்தல் முடிவடைந்துவிட்டது. கடைசியாகக் கிடைத்திருக்கும் புள்ளி விவரங்கள் பிரகாரம் அலி சஸ்திரமித் ஜோஜோவின் தேசியக் கட்சிக்கு 81,16,000 மஸ்ஜுமி கட்சிக்கு 66,16,000 நாததில் உலேமாக்கு 64,58,000 கம்யூனிஸ்ட் கட்சிக்கு 58,930,00 ஓட்டுகளும் கிடைத்திருக்கின்றன.



அலி சஸ்திரமித் ஜோஜோ

சீனவுக்கு அடுத்தபடி பலம் பொருந்திய கட்சி என்று ராய்ட்டர் நிருபர் கூறுகிறார். 'வெற்றிக்கு காரணம் கடுமையான உழைப்புத்தான்' என்று விமர்சனம் செய்கிறார்.

சுமார் 4,000 சிறுசிறு தீவுகளுட்பட்ட இந்தோனேஷியாவில் 1954 ஜனத்தொகை நிர்ணயப் பிரகாரம் 77,987,879 மக்கள் வாழ்கிறார்கள். இதில் சுமார் நாலுகோடி முப்பது லட்சம் பேர் வாக்காளர்களாக இருக்கிறார்கள். பதினெட்டு வயதுக்கு மேற்பட்ட ஆண்பெண் இரு பாலருக்கும் ஓட்டுரிமை உண்டு. கலியாணமாயிருந்தால் 18 வயதுக்குக் குறைவாக இருந்தாலும் வாக்குரிமை உண்டு.

ஒரு கட்சி எவ்வளவு ஓட்டுகள் பெறுகிறதோ அத்தனை விகிதம் உள்ள ஸ்தானங்கள் அதற்குக் கிடைக்கும் என்ற சராசரி பிரதிநிதித்துவம் தரும் வாக்குரிமை முறை அங்கு அமுலிலிருக்கிறது.

### முதல் தடவை

நாடு முழுவதும் பதினறு தேர்தல் ஜில்லாக்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. தேசிய நிர்மாண சபைக்கு 150,000 பேருக்கு ஒரு ஸ்தானமும், பார்லிமெண்டுக்கு 300,000 பேருக்கு ஒரு ஸ்தானம் உண்டு. பார்லிமெண்டிலுள்ள 260 ஸ்தானங்களுக்குத் தேர்தல் நடைபெற்றது.

தேர்தலில் போட்டியிடுவோரை 200 வாக்காளர்கள் ஆதரித்துக் கையொப்பமிட்டே நியமனப் பத்திரம் தாக்கல் செய்யவேண்டும். ஆகஸ்ட் 17, 1945ல் விடுதலை பெற்ற இந்தோனேஷியா 1949 டிசம்பர் 27ந் தேதியன்று தனது பரிபூர்ண அரசுரிமையை நிலைநாட்டிக் கொண்டது. டச்சு ஏகாதிபத்திய வாதிகளுடன் தொடர்ந்து போராடி வந்தமையாலும் இதர உள்நாட்டுச் சிக்கல்களாலும் இதுகாறும் தேர்தல் நடக்கவில்லை.

முதன் முதலாக நடைபெற்ற இந்தப் பொதுத் தேர்தலில் சுமார் மூன்று கோடி வாக்காளர்கள் ஓட்டுப் போட்டிருக்கிறார்கள். தேர்தல் முடிவில் வெளியிடப்பட்ட தாற்காலிக ஓட்டுத் தொகைகள் உள்ள நிலைமையை எடுத்து அப்பட்டமாகக் காட்டுகின்றன.

### ஐ. மு. வெற்றி!

இந்த முடிவுகளைப்பற்றி விமர்சனம் செய்யு முறையில் இந்தோனேஷியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக் காரியதரிசி தோழர் டி. என். ஐதித் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார். அதில் அவர் குறிப்பிடுவதாவது:

தேர்தலில் கலந்து கொண்டதன் மூலம் கட்சிக்கும் இதர ஜனநாயக கட்சிகளுக்கும் வெற்றி தேடிக் கொடுத்தது கம்யூனிஸ்ட் கட்சி. ஐக்கிய விரோத, கம்யூனிஸ்ட் எதிர்ப்பு, ஜனநாயக எதிர்ப்புக் கூட்டணியான மஸ்ஜுமி-சோஷலிஸ்ட் கட்சி கூட்டணி தோற்றது. சுருங்கக் கூறினல் காலனியாதிக்கத்திற்கு எதிரான ஐக்கிய முன்னணியின் வெற்றிக்குக் கட்சி பாடுபட்டது எனலாம்.

தேர்தலில் இந்தோனேஷிய மக்களின் லட்சியங்களுக்கு வெற்றி கிடைத்துள்ளதாக அறிக்கை குறிப்பிடுகிறது. ஐக்கியத்திற்காகவும், ஜனநாயக பூர்வமான தேசியக் கொள்கைக்குமாகப் பணியாற்றிவரும் கட்சிகள் மஸ்ஜுமி சோஷலிஸ்ட் கட்சிக் கூட்டணியைத் தோற்கடித்துவிட்டன.

தேர்தலுக்குப் பின்னல் கட்சி எடுக்கும் நிலையையும், வருங்கால மந்திரிசபை அமைப்பையும்பற்றி அறிக்கை குறிப்பிடுகிறது. இந்தோனேஷியக் கம்யூனிஸ்ட் கட்சி எந்தக் கட்சியுடன் வேண்டுமானலும் ஒத்துழைக்கும். மஸ்ஜுமிக்கட்சியுடனும் ஒத்துழைக்க மறுத்தது கிடையாது. ஏனென்றால் இன்றுள்ள காலகட்டத்தில் இந்தோனேஷிய மக்களின் பிரதான விரோதி விட்டகுறை தொட்டகுறையாக இருக்கும் டச்சு ஏகாதிபத்தியமே என்று கட்சி கருதுகிறது.

### தேசிய கூட்டு சர்க்கார்

இந்த டச்சு காலனியாதிக்க சக்திகள் நமக்கு பொருளாதார, அரசியல், கல்வி, கலாச்சாரத் துறைகளில் கொடுமை செய்கின்றன. இவற்றை தேசவியாபகமாக சகல சக்திகளையும் திரட்டி முறியடிக்க வேண்டும்.

தேர்தலுக்குப் பின்னல் நாட்டுக்கு ஏற்ற ஒரு நல்லாட்சி ஒரு தேசியக் கூட்டு சர்க்காராகத்தான் இருக்கவேண்டும் என்பது கம்யூனிஸ்ட் கட்சியின் அபிப்பிராயம். இந்த சர்க்கார் முன்பு இருந்த பிரதமர் அலி ஜோஜோ — நாததுல் உலிமா கட்சி கூட்டு சர்க்காரின் காலனி எதிர்ப்புக் கொள்கையைத் தொடர்ந்து கடைப்பிடிக்க வேண்டும். இந்த சர்க்காரில் இந்தோனேஷியத் தேசியக் கட்சி தலைமை தாங்கி நடத்தவும், நாததுல் உலேமா, இந்தோனேஷியன் கம்யூனிஸ்ட்கட்சி, மஸ்ஜுமி, முஸ்லிம் லீக் முதலிய எல்லாக் கட்சிகளும் கூட்டாக இயங்கவும் வேண்டும். இத்தகைய கூட்டு சர்க்காருக்கு நடைமுறையில் எதிர்ப்பே இருக்காது. இதன் பலனக தேசிய சக்திகள் எல்லாம் வெளியிலிருந்து வந்து ஊடுருவல் நடத்தும் அந்நிய விரோதிகளை ஒன்றுதிரண்டு எதிர்க்கவும், உள்நாட்டில் நிர்மாண வேலைகளைச் செய்யவும் வாய்ப்புக் கிடைக்கும்.

நாததுல் உலேமாவின் வெற்றி பற்றிக் கூறும்போது, இதை மிதவாதக் கடசி என்று பொதுவாகக் குறிப்பிட்டாலும், அதன் தலைவர்கள் தேசியக் கட்சியுடனும், கம்யூனிஸ்ட் கட்சியுடனும் ஒத்துழைத்து காலனி எதிர்ப்புத் தேசியக் கொள்கைவழி நடக்கத் தயாராக இருப்பதாகப் பகிரங்கமாகக் கூறிவந்திருக்கிறார்கள். உலேமா கட்சியின் வெற்றி முஸ்லிம் மக்களின் ஜனநாயக அபிலாஷைகளைக் காட்டுகிறது.

தேசியக் கட்சியின் வெற்றி இந்தோனேஷிய மக்களின் காலனி ஆதிக்கத்திற்கு எதிரான பலமான அபிப்பிராயத்திற்கு எடுத்துக்காட்டாக இருக்கிறது. தேசியக் கட்சிதான் மிகப் பழைய கட்சி, காலனியாதிக்க விரோதம் அதன் பாரம்பரியம். காலனியாதிக்கத்தை எதிர்த்து நடைபெறும் போராட்டத்தில்

(9-ம் பக்கம் பார்க்க)

# இலங்கைக் கடிதம்

## தமிழும் சிங்களமும்

தமிழ் மொழியும் சிங்கள மொழியும்சரி சமான அந்தஸ்துடன் ஆட்சி மொழிகளாக அங்கீகரிக்கப்படவேண்டும் என்ற நியாயமான கிளர்ச்சி இலங்கையில் தீவிரமாகிவருகிறது. இந்த லட்சியத்தை ஆதரித்து இலங்கை கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பாகவும், இலங்கை சமசமாஜக் கட்சியின் சார்பிலும் நடைபெற்ற இரு தனித் தனிப் பொதுக்கூட்டங்களைக் குழப்புவதற்கு சிங்கள வகுப்புவாத ஸ்தாபனமான திரிசிங்கள முன்னணி முயன்றிருக்கிறது.

கூட்டத்தை ஏற்பாடு செய்தவர்கள் பௌத்த பிக்ஷுக்களை அவமதித்ததாக அபாண்டங்கூறி வெறி கிளப்பப்பட்டது. இந்த யானைப் புளுகை இந்தியப் பத்திரிகை நிருபர்கள் கூட அப்படியே விழுங்கிப் பின் வெளியிட்டிருப்பது மிகவும் வருந்தத் தக்கது. இருநாட்களிலும் போலீஸ் தலையீட்டால் பலனேற்படவில்லை. இந்தியர் தமிழர் கடைகளை, குழப்பத்தில் முதலெடுக்க நினைத்த சிலர் உடைத்துச் சூறையாடியிருக்கிறார்கள். இந்த அட்டூழியத்தை கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் பீட்டர் கெனமன் கண்டித்திருக்கிறார்.

இரு மொழிகளுக்கும் ஆட்சி மொழிகளாக சம அந்தஸ்து கொடுப்பதாக ஆளும் யூ.என்.பி. கொத்தலாவலை ஆட்சி வாயளவில் பறைசாற்றி வருகிறது. ஆனல் இந்த முடிவை சட்டபூர்வமாக்க மறுக்கிறது. ஏன் இந்த அச்சம்? சிங்கள வகுப்புவாதிகள் ஆதரவு கிட்டாது என்பதால்தான். வினை விதைத்தவர்கள் வினையறுக்கிறார்கள். சிங்கள வகுப்புவாதத்திற்கு நெய்விட்டு வளர்த்தவர்களல்லவா?

கம்யூனிஸ்ட் கட்சி இந்தப் பிரச்சினையில் இரு மொழிகளும் சம அந்தஸ்துள்ள ஆட்சி மொழிகள் என்ற திட்டவட்டமான கொள்கையுடன் மக்களை அணுகுகிறது. தமிழ் மக்களின் ஐயத்தைப் போக்கவும், இது நியாயம் என்று சிங்களப் பெருமக்களிடம் விளக்கவும் அரும்பாடு படுகிறது. தமிழ்ப்பகுதிகளை சிங்களவருக்கு எதிராக திரட்ட வருபவர்களையும் கண்டித்து, சாதாரண சிங்கள மக்கள் தமிழர்களின் சகோதரர் தான் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

இந்த இரு துருவங்களையும் கண்டு—இவற்றால் விளையும் சாபக்கேட்டை உணர்ந்து ஜனநாயக ரீதியில் பிரச்சினையைத் தீர்க்க கம்யூனிஸ்ட் கட்சி உழைக்கிறது. 1939 ஆண்டு காலத்தில் தலைவிரித்தாடிய வகுப்புவாத வெறியை முறியடித்த பாரம்பர்யம் கம்யூனிஸ்ட் கட்சிக்கு உண்டு.

### கொத்தலாவலை கைங்கர்யம்

சென்ற ஓராண்டில் மாத்திரம் இலங்கையிலிருந்து தற்காலவாசிகளாக இருந்த 20,400 இந்தியர் இலங்கையைவிட்டு வெளியேறித் தாயகம் வந்து சேர்ந்துள்ளனர். இந்தியர் பிரஜா உரிமைப் பிரச்சினை தீர்க்கப்படாமல் ஊறுகாய்ப் பானையிலிட்டதுபோல இருக்கிறது.

### நவசீனவின் உதவி

சீனவுக்கும் இலங்கைக்குமிடையே அரிசி ரப்பர் ஒப்பந்தம் 1956ம் ஆண்டுக்கும் ஊர்ஜிதப் படுத்தப்பட்டது. இதன் பிரகாரம் சீன இலங்கைக்கு 2,70,000 டன் அரிசி சப்ளை செய்து, 50,000 டன் ரப்பர் வாங்கும். ரப்பரின் விலை உலக மார்க்கெட் விலையை விட ராத்தலுக்கு சுமார் இரண்டரை அண அதிகமாகவே, சீன கொடுக்கும் என்று ஒப்பந்தம் கூறுகிறது. இலங்கையின் சார்பில் வர்த்தக மந்திரி ஷெர்லி கொரியா வர்த்தக கோஷ்டியின் தலைவராகச் சென்றிருந்தார். இந்த விலை உயர்வின் விளைவாக செப்டம்பர் மாதத்துடன் முடியும் நான்கே மாதங்களில் இலங்கைக்கு சுமார் எழுபது லட்சம் ரூபாய் ஆதாயம் கிடைத்திருப்பதாகத் தெரிகிறது.

—ந. நி.

# ஆசிய ஒருமைப்பாடு மஹாநாடு

## ஜனப் நௌஷர் அலி விளக்கம்

"சமாதான சகஜீவனக் கோட்பாட்டை ஜீவநாடியாகக் கொண்டு உதித்துள்ள பஞ்சசீலக் கொள்கைகளை வீடுதோறும் பரப்புவோம். நீண்டநெடுங்காலத்திற்கு முன் ஆசிய நாடுகளுக்கிடையே நிலவிவந்த கலாசார உறவை மீண்டும் மறுமலர்ச்சி யடையச் செய்வோம். ஏகாதிபத்திய ஆதிக்கத்தின் விளைவாக முறிந்து போன தொடர்புகளைப் புதுப்பிப்போம், தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை தவறிக்கெட்டு பாழ்பட்ட நிலையிலிருந்து ஆசிய நாடுகள் அனைத்தையும் உயர்த்தி எழுச்சியுறச் செய்வோம். இதர நாடுகளுக்குச் சரிநிகர் சமானமாகத் திகழும் வழிகளை வகுப்போம்.

"இந்த லட்சியங்களை நிறைவேற்றவும் இவற்றுக்கு உறுதுணையாக நிற்கும் பிரதமர் நேருவின் சமாதானக் கொள்கைக்கு ஆதரவு தேடவுமே அகில இந்திய ஆசிய ஒருமைப்பாடு மகாநாடு ஹைதராபாத் நகரில் நடைபெறுகிறது" என்று ஆசிய ஒருமைப்பாடு மகாநாட்டுக் கமிட்டியின் பொதுச்செயலாளர் பிரபல காங்கிரஸ் தலைவர் ஜனப் நௌஷர் அலி எம்.பி. கூறினர்.

சென்னைக்கு விஜயம் செய்த ஜனப் அலி பத்திரிகை நிருபர்களுக்குப் பேட்டியளித்தார், இளம்பிறைச் சங்கத்தின் சார்பிலும், ஆசிய ஒருமைப்பாடு சென்னை கமிட்டி சார்பிலும் இரு கூட்டங்களில் பேசினர்.

சென்ற ஆண்டு ஏப்ரல் மாதத்தில் நடைபெற்ற ஆசிய மகாநாடு பாந்துங் மகாநாட்டுக்குப் பூர்வாங்கமாகத் திகழ்ந்தது என்றார். இந்த மகாநாடு நான்கு வல்லரசுகளின் வெளிநாட்டு மந்திரிகள் கூட்டத்திற்கு முன்பாகக் கூடுகிறதெனவும் இந்திய மக்களின் சமாதான லட்சியத்தைப் பிரகடனம் செய்வதாக இது திகழும் எனவும் எடுத்துச் சொன்னர்.

இம்மகாநாட்டில் 500 பிரதிநிதிகளுக்குமேல் கலந்துகொள்வார்கள் என்றும், கட்சி கொள்கை வேற்றுமையின்றி ஆசிய ஒருமைப்பாட்டை விழையும் அனைவரையும் மகாநாடு அழைக்கிறதெனவும் கூறினர். இக்கமிட்டியின் தலைமையில் ஸ்ரீமதி ராமேச்வரி நேரு பணியாற்றுவதும், டாக்டர் சோயித்ராம் கித்வானி, ஸ்ரீமதி வயலட் ஆல்வா, டாக்டர் அனுப் சிங், ரொமேஷ் சந்திரா ஆகியோர் காரியதரிசிகளாக சேவை செய்வதும் இதன் பிரதிநிதித்துவத்தை எடுத்துக்காட்டப் போதுமானதென்றார்.

காங்கிரஸ்காரர்கள் இந்த மகாநாட்டில் விசேஷ அக்கறையுடன் பங்குகொள்ள வேண்டுமெனவும் இதை எதிர்ப்பவர்கள் நேருஜியின் வெளிநாட்டுக் கொள்கையை எதிர்ப்பவர்களே என்றும் சுட்டிக்காட்டினர். சமாதானம், அணுகுண்டுத் தடை, அணுசக்தியை ஆக்கவேலைக்கு பயன்படுத்துதல், ஆசிய நாடுகளிடையே பொருளாதார கலாசார உறவுகளை வளர்த்துக்கொண்டு ஆசிய மக்கள் வாழ்க்கைத்தரத்தை உயர்த்திக் கொள்வது போன்ற பல பிரச்னைகள் இம்மகாநாட்டில் தீர்வுக்கு வருமென்றும் ஒரு புதிய அகில இந்தியக் கமிட்டி தேர்ந்தெடுக்கப்படும் என்றும் கூறினர்.

சென்னையிலிருந்து டாக்டர் கிருஷ்ண பிள்ளை, ஸ்ரீமதி ஜி. வரலக்ஷ்மி, ப. ஜீவானந்தம் எம். எல்.ஏ., கே. முத்தையா, பார்த்தசாரதி முதலியோர் பிரதிநிதிகளாகச் சென்றுள்ளார்கள். ந.நி.



Regd. M. No. 5934 Printed & Published by G. ALAVANDAR, at Janasakthi Press, Subodhaya Buildings, 38, Mount Road, Madras-6. OFFICE: 3, Anthony Street, Madras-14. Editor: K. MUTHIAH

REGISTERED AS A NEWS PAPER IN CEYLON